

PADI UTSAVAM ON 18-4-'89 AT TIRUPATI (ALIPIRI)





புத்தகம் படிகமாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்த கொந் தளகபார முகிழ்முலை தவளமேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

கையேட்டினையும், ஸ்படிக மணியினாலியன்ற மணிவடத்தையும், கரகத்தையும், ஞானம் புகட்டுதலைப் பொருளாகக்கொண்ட சின்முத்திரையையும் - தரித்த அழகிய கைகளையுடைய, குற்றமற்றவளும், மாசு இல்லாதவளும், நெருங்கிய பூங்கொத்துக்களையணிந்த கூந்தல் தொகுதியையும் அரும்பு போன்ற ஸ்தநங்களையும், வெண்ணிறமான திருமேனியையும், கருநிறமுள்ள கண்களையும், செந்நிறமுள்ள வாயையுமுடைய, தெய்வப்பெண்ணுமான சரஸ்வதியை வணங்குவோம்.

*(கம்பன் காப்புச் செய்யுள் — 3)*

ஜுன் 1989

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1
வருடச் சந்தா ரூ. 12

மலர் 20
இதம் 1

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையிலும், பின்னட்டையிலும்.
"ஸப்தகிரி" க்கு வயது இருபது.
சித்திரம். கே. ஜகதீஷ்.

முதல் உள்அட்டையில் : திருமலையில் படி விழா
2-வது உள்அட்டையில் : சென்னை மற்றும் திருப்பதியில் அன்னமய்யா ஜெயந்தி விழா காட்சிகள்

சிறப்பாசிரியர் :
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

அன்றாட உண்டிக்கும், உறக்கத்திற்கும் ஒரு பிரச்சனையும் எதிர்கொள்ளாத சூழ்நிலையில், சமயத்தின் பின்னணியில் சமுதாயத்தினைப் பார்த்த காலக்கட்டத்தில், அன்றைய மனிதனுக்கு அன்றைய சமய இலக்கியங்களைப் படித்தற்கும், பின் அவற்றைச் சிந்தித்தலுக்கும் காலம், இடம் அவர்களுக்கு ஒரு பெருந்துணையாக அமைந்திருந்தன.

ஆனால் இன்று? பெருகிவிட்ட மக்கள் கூட்டம், அருகிவிட்ட அவர்கள்தம் சமய உணர்வு, பெருக்கெடுத்தோடும் மக்கள்தம் ஆசைகள, அவற்றை நிறைவேற்றிக் கொள்ளும் முயற்சியில எதிர்கொள்ளும் அலைச்சல்கள், கசப்பான அனுபவங்கள், ஏமாற்றங்கள், இட, இன, சமயக் காழ்ப்புணர்ச்சிகள், பொருளாதாரச் சிக்கல்கள், கண்ணியமற்ற அரசியல் குறுக்கீடுகள் யாவும் ஒன்று சேர்ந்து அவனுடைய நம்பிக்கைகளை, ஏன் அவனுடைய அடிப்படை உரிமைகளையே பறித்திடும் நிலையில் இன்றைய மனிதனால் சமுதாய மேம்பாட்டினைவிட தனனைக் காப்பாற்றிக் கொள்ளும் முயற்சிக்கே பெரிதும் செயல்படும்போது, சமயப்பற்றும் ஆன்மீக உணர்வும் அவனுள் எழுவது விண்ணிற்தோன்றும் மின்னலாக உள்ளது.

மனிதனின் முயற்சிக்கு நம்பிக்கையூட்டுவது அவன் சார்ந்துள்ள இறையுணர்வு ஒன்றேயாகும். அதில் அவன் நம்பிக்கை இழந்திடும்போது, அவன் எண்ணம் நஞ்சாகின்றது, அவன்தம் செயல்கள் அழிவுக்கு வித்திடுகின்றன. இந்நிலையில் சமய இலக்கியங்கள்தாம் இன்றியமையாதனவாக விளங்குகின்றன. அப்போதும்கூட, சமய நூல்களையோ, தத்துவ விளக்கங்களையோ படிக்கும் கால அவகாசமோ அல்லது படிதது அறிந்து தெளிவுறும் மனப்பக்குவமோ இல்லாத இன்றைய சாமான்ய மனிதனுக்கு, அத்தகு சமய நூல்களைவிட, அவை கூறும் சமய உண்மைகளைக் கட்டுரைகளாகவோ, கதைகளாகவோ, சித்திரக் கதைகளாகவோ கூறிடும் பத்திரிகைகளதாம் இன்று ஒரு பெரும் வரப்பிரஸாதமாக விளங்குகின்றன. பொதுவாகப் பத்திரிகைகள் இன்றைய மக்களிடம் வெகுவாகவே வரவேற்கப்படுகின்றன என்பதற்குப் புற்றீசல்களைப் போனறு நாள் தோறும், கிழமை தோறும், திங்கள் தோறும் பலப்பல பத்திரிகைகள் வெளிவரும் நிலைமையே சான்றாகும். இந்நிலையில் சமயப் பத்திரிகைகளும் தங்களுக்கென்று ஒரு தனியிடத்தைப் பெறறிருக்கின்றன என்பதைப் பார்த்திடும்போது, நம்மையும் அறியாமல் நம்முள்-நம்மிடையே சமய உணர்வும் சற்றே இழைந்தோடிக் கொண்டிருக்கின்றது என்றே கூற வேண்டும். இவ்வகையில் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிடும் ‘ஸப்தகிரி’யின நிலையெனன, அது இதுவரை ஆற்றிய பங்கென்ன என்பதை ஒரு சுய விமர்சனமாகக் கொண்டு பார்த்தோமேயானால், அது அதன் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிடும் என்றே எண்ணுகின்றோம்.

1949-ஆம் ஆண்டு தி. தி. தேவஸ்தானம் துவக்கி வைத்த ‘தேவஸ்தான பத்திரிகை’ 1970-ஆம் ஆண்டு முதல் ‘ஸப்தகிரி’ எனும் புதுப்பெயரினைத் தாங்கி, பின்னர் தமிழ்மொழி உள்ளிட்டு மற்றைய நான்கு மொழிகளிலும் தனித்தனியாக வெளியிடப்பட்டு உருவ மறறும் பக்க மாற்றங்களுடன் இவ் இதழ் மூலமாக தனது 20-ஆவது வருடத்தில அடியெடுத்து வைத்துள்ளது.

சுமார் 20 வருட அனுபவ அடித்தளத்தின் மீது ‘ஸப்தகிரி’ எனும் பத்திரிகை அமைபபு உருவாக்கப்பட்டுள்ளது. சில எழுததாளர்களை மட்டுமே கொண்டு விளங்கிய பத்திரிகை, இன்று சாமானியரும் இந்து சமயத்தின் பெருமையை அறிந்து இன்புற்றிடும் வகையில எளிய மொழியில, தெளிந்த நடையில், வாசகர்களுக்கும் எழுத்தாளர் பெருமக்களுக்கும் இடையே எவ்விதத் தடுப்புத்திரைகளின்றி, ஒருவர் எணணத்தை மற்றவர் எளிதிற் புரிந்து கொள்ளும் வகையில் கதை, கட்டுரைகளைத் தாங்கிப் புதுப்பொலிவுடன் திகழ ஆரம்பித்தது. பின்னர் வாழ்க்கையின் எல்லா நிலையினரும் அதாவது சிறார்கள, இளைஞர்கள், பெண்கள், அறிஞர்கள், கலைஞர்கள் எனப் பலரும பயனுறும்—பங்குபெறும் வகையில் ‘ஸப்தகிரி’ விளங்கி வருவதையும் வாசகர்கள் நன்கு அறிவர்.

‘திருமலை’ வைணவச் சார்புடைய ஸ்தலமாயினும் அவவேங்கடவனை சமயங்கடந்து, நாள் தோறும் ஆயிரக் கணக்கில் பக்தர்கள் வழிபடுகின்றாாகள. இட, இன, மொழி கடந்து போற்றப்படும் அவ்வேங்கடவனின் திருவருளால் நடத்தபபடும ‘ஸப்தகிரி’யும ஒரு குறிப்பிட்ட சமயப்பிரிவினர்க்கு மட்டுமன்றி, ‘இந்து’ எனப்படும் ஒவ்வொருவருக்கும் உரிமையானதே எனற உயாகொளகையினை மனதிற கொண்டே எவ்விதச் சமயக்காழ்ப்புணர்சசிக்கும இடங்கொடாது இநது சமயத்தின் எல்லா உட்பிரிவினர்ககும் உரிய இடந்தந்திடும் வகையில கதை, கட்டுரைகளை வெளியிட்டு வருவதையும் வாசகர்கள நனகு அறிவர். பதநிரிகையின் இந்த அணுகு முறை தவறல்ல என்பதற்கு, நாளுக்கு நாள் வளர்ந்துவரும் ‘ஸப்தகிரி’யே சாட்சியாகும்.

‘ஸப்தகிரி’யில் உள்ள ஒரே குறை அது அவ்வப்போது காலம் கடந்து வெளி வருவதுதான். அரசு கடைபிடித்து வரும் சில நடைமுறை நிரவாக முறைகளை தி தி. தேவஸ்தானமும் கொண்டு ஒழுக வேண்டும் என்ற விதி இருபபதால், இந்தக் குறை அவ்வப்போது தவிர்க்க முடியாதொன்றாகி விடுகிறது. எனினும் மேலாண்மை தனது அனைத்து உதவிகளையும் முழு மனத்துடன் தந்து உதவுவதால் இக்குறையினை முடிந்தவரை தவிர்க்கவே ஸப்தகிரி நிர்வாகம் முழு முயறசிகளை மேறகொண்டு வருகிறது. இதுபோது வாசகர்கள ஈந்து வரும் ஒத்துழைப்பினையும் நிர்வாகம் நினைததுப் பார்க்கவே செய்கின்றது.

இந்து சமயத்தின் பெருமையினைப் பலரும் அறிந்திடும வகையில் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டுள்ள ஸபதகிரி மேலும வளாந்து, அதன வளர்சசியின் மூலம் பலரும் பயனுறும் வகையில், அது சமய பத்திரிகை உலகில் ஒரு முன்னுதாரணமாகச் செயல்படும் என்று வாசகர்களுக்கு உறுதியளிக்கின்றது. அதே தருணத்து ஸப்தகிரி எனும் ஆலமரத்தின் வேராக இருககும் தி. தி. தே. மேலாண்மைக்கும், அமமரததின் விழுதுகளாக அமைந்துள்ள எழுத்தாளர் பெருமக்களுக்கும், வாசகர்களுக்கும், விற்பனைப் பிரதிநிதிகளுக்கும் எங்கள் நனறியைத் தெரிவித்துக் கொண்டு, தன்னுடைய இருபதாவது வயதில் அடியெடுத்து வைத்துள்ள ஸப்தகிரி, அவர்கள்தம் வாழ்த்துக்களுடன் மேலும் புதுப்பொலிவுடன் விளங்கும் என்றே உறுதி அளிக்கின்றோம்.

# செய்திச் சுருக்கம்

### படி விழா

திருப்பதி—திருமலை 20-வது படி விழா அண்மையில் மிகச் சிறப்பாக திருப்பதியிலும், திருமலையிலும் நடைபெற்றது. இவ்விழாவில் தமிழ் நாட்டைச் சார்ந்த 116 பஜனைக் குழுவினர்கள் கலந்து கொண்டனர். பஜனைக் குழுவினர் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டு (திருப்பதி நகர வீதிகளில்) சென்றதும், திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் நடைபெற்ற குழுப் பாடல் நிகழ்ச்சிகளும்கண்ணிற்கும் கருத்திற்கும்பெரு விருந்தாக அமைந்தன. படி விழாச் சார்பில் திருப்பதியில் கோவிந்தராஜ திருமண மண்டபத்தில் அன்னதானம் நடைபெற்றது. பின்னர் படிவிழா ஊர்வலம் திருப்பதி மலை அடிவாரத்திலிருந்து கோஷ்டி கானத்துடன் புறப்பட்டுச் சென்றது. இது போது தி. தி. தே. பொது ஜனத்தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்யநாராயண மூர்த்தி, திரைப்படத் தயாரிப்பாளர் திருப்பூர் மணி, படி விழா செயலர் திரு அ. செ. நரசிம்மன், திரு. டி.எஸ். அனந்த நாராயண அடிகளார், சென்னை முருகாஸ்ரமம ஸ்ரீ சங்கர அடிகள் மற்றும் பலரும் இப்படி விழாவில் பங்கேற்றனர். பின்னர் திருமலை சதஸ் அரங்கில் நடைபெற்ற இசை நிகழ்ச்சிகளின்போது திருமலை ஸ்ரீநிவாச ஐயங்கார், வேலூர் ராமசாமி செட்டியார், சென்னை வாடெனி முசிறி வீராசாமி ஆகியோரும் பங்கேற்றனர். மறு நாள் சதஸ் அரங்கில் நடைபெற்ற கருத்தரங்கின் போது சக்தி சீனிவாசன், பட்டுக் கோட்டை ராசப்பா, ரகுநாத பாகவதர், மதுராந்தகம் ரகுவீரப்பட்டாச்சாரி, கரந்தை தாமோதரன் ஆகியோர் பங்கேற்றுப் பேசினர். செய்யார் வக்கீல் இந்திரஜித், சம்பத் ஐயங்கார், காஞ்சி கம்பன் கழகச் செயலர் முத்து ராமமூர்த்தி ஆகியோர் பங்கேற்றுத் தங்கள் கவிதைகளைப் பாடினார்கள். விழா முடிவில் திரு அ. செ. நரசிம்மன் அவர்கள் நன்றி நவின்றார்.

### ஜெயந்தி விழா :

தாள்ளப்பாக்கம் ஸ்ரீஅன்னமாச்சார்யாவின் 581-ஆவது ஜெயந்தி விழா சென்னை, விசாகப்பட்டினம், வரங்கல், அனந்தபூர், திருப்பதி ஆகிய இடங்களில் மிகச் சிறப்பாக 20-5-89 முதல் 30-5-89 வரை நடைபெற்றது. ஜெயந்தி விழாவின் துவக்க நாள் நிகழ்ச்சிகள் சென்னை நாரதகான சபாவில் 20-5-89 அன்று மாலை மிகச் சிறப்பாக நடைபெற்றன. இறுதி நாள் நிகழ்ச்சிகள் திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் நடைபெற்றன. இதுபோது திரு. வை. கே. வி. என். ஆச்சார்யா, திரு. எம். கொண்டமாச்சார்யா, திரு. கே. சி. ஜெயசந்திர சாஸ்திரி ஆகியோரின் சிறப்புச சொற்பொழிவுகள் நடைபெற்றன. திரு.ஜி.பாலகிருஷ்ண பிரஸாத், திருமதி ஜி. ஜானகிரமணு, திருமதி. மணி கிருஷ்ண சுவாமி, திரு. எல்லா வேங்கடேஸ்வர ராவ் ஆகியோரின் இசை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. 30-5-89 அன்று நடைபெற்ற நிகழ்ச்சிகளின்போது, திரு. எம். பாலமுரளிகிருஷ்ணு உள்ளிட்டுப் பல இசைக் கலைஞர்கள் பங்கேற்ற ஒலிப்பதிவு நாடா தொகுப்புகளை திருப்பதி ஸ்ரீ பத்மாவதி மகளிர்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திருமதி. கே. ராஜ்யலட்சுமி அவர்கள வெளியிட்டார். மேலும் தி தி. தே. பிரசுரித்த மூன்று தெலுங்கு சமய நூல்களையும் வெளியிட்டார். இவ் விழாவில் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி. எச். வெங்கடபதி ராஜு, தி.தி.தே. அன்னமாச்சார்யா திட்டப்பிரிவு ஒத்திசைவாளர் திரு. மேடசானி மோகன் ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர்.

ஃ ஃ ஃ

திருமலை ராம்பகீச்சா 3-வது சத்திரக் கட்டிடத்தினை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர் திரு. டி. சீதாராமய்யா அவர்கள் 19-5-89 அன்று திறந்து வைத்தார்.

ஃ ஃ ஃ

பம்பாயைச் சார்ந்த திரு. கபில மெஹ்ரா அவர்கள் தி. தி. தேவஸ் தானத்தாரின் நித்ய அன்னதான திட்டத்திற்கென ரூ. 5 இலட்சம் வழங்கினர்.

ஃ ஃ ஃ

திருமலையில் வசந்தோத்சவம் 18-5-89 முதல் 24-5-89 வரை ஏழு நாட்களுக்கு மிகச் சிறப்பாக நடைபெற்றது. 19-5-89 அன்று உத்சவர் வெள்ளி ரதத்தில் எழுந்தருளி திருவீதி திருவுலா மேற்கொண்டது உத்சவத்தின் சிறப்பு நிகழ்ச்சியாக அமைந்தது.

ஃ ஃ ஃ

### திருமலையில் :

சென்ற மாதம் பல்வேறு நாட்களின் போது, இலங்கைக் கல்வி அமைச்சர் திரு. பி. கே. புதா, இந்திய மத்திய விவசாயத்துறை அமைச்சர் திரு. ஹரி கிருஷ்ண சாஸ்திரி, ஆந்திர மாநில சுகாதார அமைசசா திரு. பி. சுப் பைய்யா, உள்ளாட்சித்துறை அமைச்சர், திரு. வி. ரங்கா ராவ் ஆகியோர் திருமலைக்கு வருகை புரிந்து ஏழுமலையானைத் தரிசித்தனர்.

ஃ ஃ ஃ

தமிழ் நாடு வட ஆற்காடு மாவட்டம் பையம்பாடி கிராமத்தில் 30-5-89 அன்று திரு பி. எஸ். வெங்கட வரதாச்சாரியாரின் முன்னிலையில் ஸ்ரீ ஸூக்த பாராயணம், மஹாலக்ஷ்மி பூஜை ஆகியவை மிகச் சிறப்பாக நடைபெற்றது.

தகவல் : லேவா ஸ்ரீநிவாச ராகவன்.

卐

# கிளரொளியால் குறைவில்லா அரி



ஸ்ரீ நரசிம்மமூர்த்தி-ஸ்ரீரங்கம

பறவை யேறு பரம புருடனும் திருமாலின் பத்து அவதாரங்களில் நரசிம்மம் நான்காவதாக வைத்துப் போற்றப்படுகிறது.

திருமால் வராக வடிவில் தனது தம்பியான் இரணியகசிபைக் கொன றதை அறிந்த இரணியன் திருமால் மேல கடுங்கோபம் கொண்டான். திருமகள் கேள்வனைக் கொலல வேணடி அதற்கு முதற்படியாகத் தன் உயிரைத் தக்கவாறு பாதுகாக்க பிரமனைக் குறித்து தவம் இயற்றி வெகு வரங்கள் பெற்றான். வான வரால், மானிடரால், விலங்குகளால் கொல்லப்பட மாட்டான்; நீரில், நெருப்பில், காற்றில் இறப்பு இல்லை; மாளிகைக்கு வெளியிலோ உள்ளோ சாவு இல்லை; பகலில் இரவில் இறப்பு இல்லை. எந்தப் படைக்கலத்தாலும் கொல்லப்பட மாட்டான். இவ்வாறு இவன் பெற்ற பெரு வரத்தை கம்ப நாட்டாழ்வார், 'பெண்ணில பேரெழில் ஆணில் அலியில்' என்று தொடங்கும் பாடல் முதற்கொண்டு 5 பாடல்களிலும், இவனது பெரு வலியை "வேதம் கணணிய பொருள் எலாம்" என்பது முதற்கொண்டு 13 பாடல்களிலும் விவரித்துள்ளார். அவனது ஆணையின்படி, அனைவரும் அவனையே கடவுளாக வணங்கினர். இந்நிலையில் அவனுக்கு மகனுகப் பிறந்த பிரகலாதன் திருமாலை வணங்க, அதனால் கோபமுற்ற இரணியன் அவனைக் கொல்ல முயன்று பயன் அளிக்காது போயிற்று ஒரு நாள் மாலை வேளையில் தன் மகனை நாராயணன் எங்கே என்று கேட்க, அவன் "தூணிலும் உளன; துரும்பிலும் உளன்" என்று பதில் அளித்தான். இரணியன் தன் எதிரில் உள்ள தூண் ஒன்றைக் காட்டி, அதைப் புடைத்தான். அதினின்றும் நரசிம்மம் தோன்றியதை,

"எங்கும் உளன் கண்ணன என்ற மகனைக் காய்ந்து
இங்கு இலலையால் என்று இரணியன் தூண்புடைப்ப
அங்கு அப்பொழுதே அவன வியத் தோன்றிய என்
சிங்கப்பிரான்" (2-8-9)

என நம்மாழ்வார் தமது திருமொழியில் பாடியருளியுள்ளார்.

"உயர்ந்த கையால் எற்றினன எற்றலோடும்
திசைதிறந்து அண்டமகீறச சிரித்தது செங்கண் சீயம் (6-3-256)

எனக் கம்ப நாட்டாழ்வார் இதன் தோற்றத்தைக் குறிப்பிட்டு, 'பிளந்தது தூணும் ஆங்கே பிறந்தது சீயம்' என்பது முதல் 14 பாடல்களில் அதன் தோற்றத்தையும், அசுரர்களை அழித்ததையும் படிப்போர் கண்முன் நிறுத்துகிறார். இரணியன் பிரமாவிடம் பெற்ற பெரு வரத்தைக் கருத்தில் கொண்டு, திருமால் நரசிம்ம வடிவில் தோன்றி, அவனைத் தன் மடியில் வைத்துத் தன் கை நகங்களால் கீறிக் கொன்று விட்டான்.

திருமாலிடத்து ஆழ்ந்த அன்பு கொண்ட ஆழ்வார்கள் நரசிம்மத்தின் திருவுருவையும் இரணியனைக் கொன்றதையும் தமது திருப்பாசுரங்களில் பலபடியாக மங்களா சாசனம் செய்துள்ளனர். ஆண்டாள் ஒரு இடத்திலும், பூதத்தாழ்வார் 4 இடங்களிலும், பேயாழ்வார் 5 இடங்களிலும், திருமழிசைப் பிரான் 6 இடங்களிலும், பொய்கையாழ்வாரும பெரியாழ்வாரும் 8 இடங்களிலும், நம்மாழ்வார் 15 இடங்களிலும், மங்கை மன்னன் 53 இடங்களிலும் இந்த வடிவைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

திரு. தி. இராசமாணிக்கம்,
பொள்ளாச்சி.

இதினின்றும் மங்கை மன்னன் தான் இந்த வடிவைப் பெரும் அளவில் புகழ்ந்துள்ளது தெரிய வருகிறது.

நரசிம்மனின் தோற்றத்தை,

"ஆயிரந்தோள் எழுந்தாட
பைங்கண் இரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றொடு பேழ்வாய்
சிங்க உரு" (3-3 8)

என்று அருளிய மங்கை மன்னன் "சிஙகவேள் குனறம்" என்ற வடநாட்டில் உள்ள திருப்பதியைப் பற்றிய தமது திருப்பாசுரத்தில் இதன் வடிவைப் பலவாறுக விளக்கமாகக் கூறியுள்ளார்.

"அலைத்த பேழ்வாய் வாள் எயிற்று
ஓர் கோளரியாய்" (1-7-2)

'' ஏய்ந்த பேழ்வாய் வான எயிற்று ஓர்
கோளரியாய்'' (1-7-3)

'' மென்ற பேழ்வாய் வான எயிற்று ஓர்
கோளரியாய்'' (1-7-5)

'' எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய்
எயிற்றொடு'' (1-7-6)

என்பன அவரது திருவாக்குகள். நரசிம்மம் தூணில் தோன்றி வளர்ந்தமையைக் கம்பநாட்டாழ்வார்,

'' பிளந்தது தூணும் ஆங்கே பிறந்தது
சீயம் பின்னை
வளர்ந்து திசைகள் எட்டும் பகிரண்டம்
முதல் மற்றும்
அளந்தது அப்புறத்துச் செய்கையார்
அறிந்து அறைகிற்பார்
கிளர்ந்தது ககனமுட்டை கிழித்தது
கீழும் மேலும்'' (6-3-259)

என்பர். பிளந்த தூணின்றும் தோன்றிய நரசிம்மம் எட்டுத் திசைகளிலும் பரவி வளர்ந்தது. இந்த உலகுக்கு அப்பால் உள்ள அண்டங்களை அளப்பது போன்று நீண்டு வளர்ந்தது. அதனால் உலகமாகிய உருண்டையின் மேலும் கீழும் பிளவு ஏற்பட்டது என்பதாம்.

'' முனைத்த சீற்றம் விண்சுடப்போய்
மூவுலகும் பிறவும்
அனைத்தும் அஞ்சஆளரியாய்'' (1-7-7)

என மங்கை மன்னன் நரசிம்மத்தின் சீற்றத்து வெம்மை விண்ணோர் உலகைச் சுட்டது என்று கூறுவதினின்றும் அதன் சினத்தை உணரலாம். எந்த இமையோர்களுக்காக சக்கரத்தண்ணல் நரசிம்மத்தின் வடிவைக் கொண்டானோ, அவர்களே இதைக் கண்டு அச்சம் அடைந்தனர்.

'' எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய்
எயிற்றொடு இது எவ்வுருவென்று
இரிந்து வானோர் கலங்கியோட (1-7-6)

'' திண்ணியது ஓர் அரி உருவாய்த்
திசையனைத்தும் நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திசைப்ப''
(3-9-2)

என்பன மங்கை மன்னன் அருள் வாக்குகளாம்.

'' பெரியவனை மாயவனைப் பேருலகம்
எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக்
கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன
கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம்
கண்ணென்ன கண்ணே''
(17-படர்க்கைப்பரவல்-2)

என்று இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் அழகின் உறைவிடமாகப் போற்றும் திருமால் தன் அன்பர்களுக்காக அத்தகைய அச்சம் அளிக்கும் வடிவினைக் கொண்டான் என்பது எண்ணத்தக்கது.

நரசிம்மம் இரணியனைத் தன் மடியில் வைத்துத் தன் நகங்களால் கொன்றதை ஆழ்வார்கள் தமது திருப்பாசுரங்களில் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளனர்.

'' உரம்பற்றி இரணியனை உகிர் நுதியால்
ஒள்ளிய மார்வு உறைக்கவூன்றி
சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க
வாயலறத் தெழித்தான''

எனப் பெரியாழ்வாரும்,

'' பேர்ரார் நெடுவேலோன் பொன் பெயரோன் ஆகத்தை
கூர்ஆர்ந்த வள்ளுகிரால் கீண்டு—குடல்
மாலை
சீரார் திருமார்பின் மேல்கட்டி—
செங்குருதி
சோராக் கிடந்தானைக் குங்குமத்தோள்
கொட்டி
ஆரா எழுந்தான் அரி உருவாய்''
(சிறிய திருமடல்)

'' ...ஆயிரக்கண் மன்னவன் வானமும்
வானவர் தம் பொன்னுலகும்
தன்னுடைய தோள் வலியால் கைக்
கொண்ட தானவனை
பின்னோர் அரியுருவமாகி எரி விழித்து
கொன்னவிலும் வெஞ்சமத்துக்கொல்
லாதே—வல்லாளன்
மன்னு மணிக்குஞ்சி பற்றி வரவீர்த்து
தன்னுடைய தாள்மேல் கிடாத்தி
அவனுடைய
பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து
புகழ் படைத்த
மின்னிலங்கும் ஆழிப்படைத்தடக்கை
வீரனை''
(பெரிய திருமடல்)

என மங்கை மன்னனும் அருளியுள்ளனர்.

இரணியன் அளந்திட்ட தூணினின்றும் அவன் தன் கையால் தட்டியவுடனே அவன் தட்டிய இடத்தினின்றும் வளர்ச்சி அடைந்த நிலையில் நரசிம்மம் தோன்றி அவனைக் கொன்றதை,

'' அளந்திட்ட தூணை அவன்தட்ட
ஆங்கே
வளர்ந்திட்டு வாள் உகிர்ச்சிங்க
உருவாய்
உளந்தொட்டு இரணியன் ஒண்
மார்வகலம்
பிளந்திட்டகை '' (1-6-9)

என்பர் பெரியாழ்வார். இவ்வாறு இரணியன் தூணைத் தட்டியவுடனே நரசிம்மம் தோன்றியதை இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான் என்ற அவனது இயல்பினை எடுத்துக் காட்டுகிறது. இது நரசிம்மத் தோற்றத்தின் தனிச் சிறப்பாகும்.

அச்சத்தை அளிக்கும் நரசிம்மர் யோக நிலையில் வணங்கப்படுகிறான். சிவபெருமானுக்கு தட்சணாமூர்த்தி வடிவம் போன்று திருமாலுக்கு யோக நரசிம்ம வடிவம் யோக நிலையை உணர்த்துகிறது. திருமாலின் 10 அவதாரங்களில் வேறு எந்த அவதாரமும் யோக நிலையில் வணங்கப் படுவதில்லை. இந்த இயல்பு நரசிம்மத் தோற்றத்தின் மற்றுமோர் சிறப்பாகும்.

திருமகளைத் தன் மடியில் வைத்துள்ள திருமாலின் வடிவம் இலட்சுமி நாராயணன் என்று வணங்கப் பெறுகிறது. அவனது 10 அவதாரங்களில் நரசிம்ம வடிவம் மட்டும்தான் திருமகளைத் தன் மடியில் வைத்துள்ளதாக அமைக்கப்படுகிறது. இது இலட்

சுமி நரசிம்மவ எனப பரவப்படுகிருன். வேறு எநதத் தோற்றத்திற்கும இதததகைய அமைபபு கிடையாது.

முறகாலததில சைவக கோயிலாயினும சரி வைணவக கோயிலாயினும சரி கருவறையின மேல அமைக்கப்படும் விமானத்திவ தெனபுறததில தட்சணுமூாததி வடிவமும், மேல புறததில் யோக நரசிமமா வடிவமும அமைககுமரபு பினபறறப்பட்டு வநதது. செங்கலபட்டு மாவட்டததைச சார்நத காஞ்சிபுரததில் உள்ள ஜுர கரே சுவரர்மறறும சுருதரரால்பாடபெறற கசசி அனேகதங்காவதம் என்ற சிவாலயஙகளேயும, திருநெல்வேலி மாவட்டததைச சார்நத மன்ஞர் கோயிலிலுள்ள இராஜேநதிர சோழ விணணகரம எனற வைணவ ஆலயத்தையும சானறுகளாகக் கூறலாம். இது அககாலத்தில நரசிம்மர் எவ்வாறு போற்றி வணஙகப்பட்டார எனபதை நன்கு உணாததுகிறது.

இவவாறு பல சிறபபுகளேக கொணட நரசிமம வடிவை ஆகமங்களில் யோக நரசிம்மா, உக்ர நரசிமமா, யானுக நரசிம்மா, இலட்சுமி நரசிமமர் என நான்கு வகையாககூறப்பட்டுள்ளது. யோக நரசிம்மரைப் பொதுவாகத் துணேவியர் இனறி தாமரை இருக்கைமீது உதகுடி இருக்கையில் அமைக்க வேணடும. யோக பட்டை இடுப்பைச் சுற்றியிருககும இநத வடிவம் கேவல நரசிமமர் என்றும அழைககப்பெறும 2 அலலது 4 கைகளே அமைககலாம. 4 கைகள் இருபபின, பின வலது கையில சக்கரமும, பின இடது கையில் சஙகும் காணப்பட, முன இரு கைகள முழங்கால்கள்மேல் நீட்டியிருக்க வேண்டும். 'சில்பரத தினம்' எனற நூலினபடி, நீட்டிய இருகைகளே ஒட்டி அஙகும் சக்கரமும், பின இருகைகளில் கதையும் தாமரை மலரும் இருக்க வேண்டும். இந்த வடிவை வேறுவிதமாகவும் உருவாக்கலாம. சிங்காதனததுமீது சுகாசனததில் இந்த வடிவை அமைக்கலாம். பொதுவாக இந்த வடிவிறகு 4 கைகள் இருககும். பின இரு கைகளில் சங்கும சக்கரமும் இருகக, முன வலது கை அபய முததிரையிலும், முன் இடது கை கடி முததிரையிலும் காணபபட வேண்டும. வலது புறம் சுகாசனத்தில் உட்கார்நதுள்ள திருமகளின் இடது கையில் தாமரை மலரும வலது கை இருக்கைமீது இருகக வேண்டும. இடது புறம சுகாசனத்தில அமாநதுளள மண மடந்தையின் வலது கையில் நீலோற பல மலரும, இடதுகை இருக்கை மீதும அமைக்கப்பட வேண்டும்.



ஸ்ரீயோக ஆஞ்சநேயர்- ஸ்ரீகடிகாசலம் (சோளிங்கர்)

சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்கும உக்ர நரசிம்மரின் 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சககரமும இருக்க, முன் வலது கை அபய

அல்லது வரதமுத்திரையில் இருக்கலாம். முன் இடது கை தொடைமீது காணப்படும். வாயில் கோரைப் பற்கள் இருக்க வேண்டும். வைகானச ஆகமத்தின்படி, திரிபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவிற்கு 12 அல்லது 16 கைகள் இருக்கலாம். மடியில் கிடத்தப்பட்ட இரணியனது வயிற்றை இரு கைகளால் பிளக்க வேண்டும். வலது கை ஒன்று அபய முத்திரையிலும் மற்றொன்றில் கத்தியும் இருக்க, இடது கை ஒன்றால் அசுரனின தலையில் உள்ள மகுடத்தைப் பிடித்துக் கொண்டிருக்க, மற்றொரு கை அடிப்பது போன்று இருக்கும். வலது கை ஒன்றால் அசுரனது கால்களைப் பிடித்து இருக்க வேண்டும். அவனது குடலை வலது மற்றும் இடது கைகள் இரண்டால் மாலையைப் போன்று தூக்கிக் கொண்டிருக்க வேண்டும். அவுணன் திருமாலுடன் போரிடவேண்டித்தன் கைகளில் கத்தியும் கேடயமும் பிடித்து இருக்க வேண்டும் மலர் மடந்தை, மண் மடந்தை, பிரகலாதன், வீணையுடன நாரதர் ஆகியோர் இரு புறமும் கூப்பிய கைகளுடன் நரசிம்மத்தின் சீற்றத்தைத் தணிக்கும் முயற்சியில் அமைக்கப்பட வேண்டும். 8 கைகள் கொண்ட வடிவில் இரண்டு கைகள் அவுணனது வயிற்றைப் பிளக்கும் நிலையிலும், 2 கைகள் அவனது குடலை மாலை போன்று பிடித்த நிலையாலும, ஏனைய 4 கைகளில் சங்கு, சக்கரம், தாமரை மலர் மற்றும் கதை ஆகியவற்றை உருவாக்க வேண்டும்.

கருடனது தோள்களின்மீது அல்லது ஆதிசேடன்மீது உட்கார்ந்துள்ள வடிவம் யாகை நரசிம்மர் என்று அழைக்கப் பெறும். 4 கைகள் கொண்ட இவனதுபின் இருகைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, தலைக்கு மேல் ஆதிசேடனின் 5 தலைகள் குடை போன்று காணப்படும்.

மலர் மங்கையைத் தன் மடிமீது வைத்துள்ள வடிவம் இலட்சுமி நரசிம்மர் எனப்பெறும். இறைவன் தாமரை இருக்கைமீது சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். மடிமீது அமர்ந்துள்ள மலர் மகளின் இரு கால்கள் தொங்கிய நிலையில் காணப்படும். 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலது கையில் சக்கரமும், பின் இடது கையில் சங்கும் காணப்பட, முன் வலது கை அபய முத்திரையில் இருக்கும். முன் இடது கையால் தன் மடிமீது உள்ள செந்திருவை அணைத்துக் கொண்டிருக்க வேண்டும். திருமகள் தனது வலது கையால் நரசிம்மரை அணைத்துக் கொண்டும், இடது கையால் தாமரை மலரை ஏந்தியபடியும் இருக்க வேண்டும்.

வடநாட்டில் உத்திரப் பிரதேசம், பீகார், வங்காளம் ஆகிய மாநிலங்களில் இடது காலை சற்று தூக்கி நடனமாடும் நிலையில் நரசிம்மர் அமைந்துள்ளதாகத் தெரிகிறது.

பல்லவர்களது குடைவரைக் கோயில்களில் சென்னையிலிருந்து செங்கல்பட்டு செல்லும் வழியில் உள்ள சிங்கப் பெருமாள் குடைவரைக் கோயிலில் இந்த வடிவம் மூலவராக உள்ளது. நரசிங்க விண்ணகரம் எனப் பெறும் அந்தக் கோயிலில் உள்ள மூலவர் சுதையாலானது. இது இதன் தொன்மையைச் சுட்டிக் காட்டுகிறது. வீராசனத்தில் அமர்ந்துள்ள இவரது 4 கைகளில பின் வலதுகையில் சக்கரமும், பின் இடது கையில் சங்கும் உள்ளன. முன் வலது கை அபய முத்திரையிலும், முன் இடது கை தொடைமீதும் காணப்படுகின்றன. உக்ர நரசிம்மர் என்று அழைக்கப் பெறும் இவன் அருள் வடிவினனாகக் காணப்படுகிறான். சுகாசனத்திற்குப் பதில் வீராசனத்தில் இவன் அமர்ந்து இருப்பதும், இடது கை கடி முத்திரையில் இல்லாது தொடைமீது இருப்பதும் ஆகமத்தில் உள்ளவற்றிற்கு வேறுபட்டு உள்ளன.

மதுரையினின்றும் மேலூர் செல்லும் பெரு வழியில் உள்ள ஒத்தக்கடை என்ற சிற்றூரை அடுத்துள்ள ஆனைமலையில் நரசிம்மரை மூலவராகக் கொண்ட பாண்டியர்களது குடைவரைக் கோயில் உள்ளது. இவன் இங்கு 2 கைகளுடன யோக நரசிம்மராக எழுந்தருளியுள்ளான். இங்குள்ள வடிவமும் சுதையாலானது என்பது குறிப்பிடத்தக்கது. மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்திலுள்ள பாண்டியர்களது மற்றொரு குடைவரைக் கோயிலில் திருமாலின் கருவறையை ஒட்டிய பாறையில உக்ர நரசிம்மர் வடிவம் புடைசிற்பமாகக் காணப்படுகிறது. 4 கைகள் கொண்ட இவனது மடியில் இரணியன் கிடத்தப்பட்டுள்ளான். இரு கைகள தூக்கிய நிலையில் காணப்பட, முன் இரு கைளால் இரணியனது வயிற்றைப் பிளப்பது போன்று இவன் உருவாக்கப்பட்டுள்ளான்.

சேலம் மாவட்டத்தைச் சார்ந்த நாமக்கல் மலையில் மேல் புறமாக உள்ள அதியமான்களது குடைவரைக் கோயிலில் நரசிம்மர் மூலவராக 4 கைகளுடன் வீராசனத்தில் உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறான். இரணியனது உடலைப் பிளந்த கை என்பதற்கு ஏற்ப இங்குள்ள மூலவரது முன் வலது கையில் சிவப்பு நிறம் உள்ளது. கையில் சிவப்பு நீரோட்டம் அமையும்படி இந்தத் திருவுருவினை உருவாக்கிய சிற்பியின் கைத்திறன் போற்றத்தக்கது. முன் இடது கை தொடைமீது இருகக, கத்திரி முத்திரையில் உள்ள பின் இரு கைகளுக்கு மேல் சஙகும் சக்கரமும் காணப்படுகின்றன. படைக்கலங்களைக கைகளில் ஏந்திய நிலையில் இல்லாது, கைகளுக்கு சற்று மேலே அமைத்துள்ளது இந்தக் கோயிலின் தனிச் சிறப்பாகும். மூலவருக்கு இரு புறமும் சாமரங்களுடன் ஞாயிறும் திங்களும், வலது புறத்தில் சிவபெருமானும், இடது புறத்தில் பிரமனும் காணப்படுகின்றனர். இத்தகைய

(42-ம் பக்கம் பார்க்க)

# புராணங்களும் அவற்றை அணுகும் முறைகளும்

உடல நிலை சரியில்லாத ஒருவர் மருத்துவரிடம் போனர். அவரது உடலைப் பரிசோதித்த மருத்துவர் அவருக்கு ஏதோ ஒரு மருந்தை உண்ணத் தந்தார். அதை வாயில் வைத்த நோயாளி, 'ஒரே கசப்பு! இதை எப்படி உண்பது?' என்ருர். உடனே மருத்துவர் அம்மருந்தைத் தேனில் குழைத்துத் தந்தார். நோயாளி அதை எளிதாகச் சுவைத்து உட்கொண்டார்.

ஆஙகில மருத்துவத்தில் இது போன்ற கசப்பான மருந்துகளை, நோயாளிகள் எளிதாக உண்பதற்கேற்ப உறைகளிலிட்டு வழங்குகின்றனர். அதை அவர்கள் 'Capsules' என்று குறிப்பிடுவார்கள்.


திரு. பே. சா. கர்ண சேகரன,
(B.SC.,F.T.C.,)
கோவை.


மருந்தைத் தனியாகத் தந்தபோது அது கசந்தது; உண்பதற்குக கடினமாக இருந்தது. ஆனல், அதையே தேனில் குழைத்துத் தந்தபோது அல்லது Capsules ஆகத் தந்தபோது உண்பதற்கு எளிதாக இருந்தது. அத்தேனில் குழைத்த மருந்து அல்லது அக Capsules ஐப போன்றவைதான புராணங்கள்.

மனித வாழ்வுக்குப் பயன்படக் கூடியவை தத்துவக் கருத்துககள். அதைத தம் அனுபவத்தில் உணர்ந்த நம் முன்னோர்கள் அக்கருத்துக்களை நமக்குச் சொல்ல எண்ணினர். தத்துவக் கருத்துக்களை வெறுமனே கருத்துக்களாகச் சொன்னல் அவை எடுபடாது— கட்பவர்க்கு இனிக்காது. கேட்பவர்க்கு இனிக்காதபோது அவை அவர்களின் மனதில் தைத்துப் பயனையும் விளைவிக்காது. ஆனல், கதைகளைக் கேட்பதிலோ படிப்பதிலோ மனிதனுக்கு என்றுமே ஆர்வம் அதிகம். எனவேதான் அக்கருத்துக்களைக் கதைகளில் உள்ளடக்கிக் கூறினர். அப்படிக் கூறப்பட்டக் கதைகள் தான் புராணங்கள். இதை, "தத்துவ நுட்பங்களை மக்கள் எளிதில் உணருமாறு கதை வடிவாக எழுதப்பட்ட நூல்களே இப்புராணங்கள்" (முருகன் அல்லது அழகு, 1977, பக்கம், 128) என்று கூறுகிருர் திரு.வி.க'

எனவே, தத்துவக கருத்துக்களைக கசப்பான மருந்து என்று கூறினல் புராணங்களைத் தேனில் குழைத்த மருந்து அல்லது Capsules என்று கூறலாம்

'சத்தியமே வெல்லும்; எத்துணைத் துன்பம் வந்தாலும் சத்தியமே பேச வேண்டும்' எனறு சொன்னல் எத்தனை பேர் கேட்பார்கள்? ஆனல், அதையே கதையாக அரிச்சந்தபுராணமாக சொல்லும்போது எல்லோரும் கேட்கிருர்கள்; ஆனந்தபபடுகிருர்கள். அதோடு, கருத்தாகச் சொல்லும்போதைவிடக் கதையாகச் சொல்லும்போது அது கேட்பவர்களின் மனதில் எளிதிப் பதிந்துவிடுகிறது; பயனையும் விளைவிக்கிறது.

இதுவரை நாம பார்த்தவற்றை எல்லாம் சுருக்கிச சொன்னறபோலச் சொல்லியிருககிருர் டாகடா எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள். அது,

"புராணங்கள், கதைகள் அல்லது புனைக் கதைகள் என்ற உடை தாங்கிய உயரிய தத்துவ நுட்பங்களைக் கொணடவை. இதனல் அவை பெரும்பான்மையான எளிய சாதாரண மாணவர்களுக்கும் பொருந்துவனவாக உள்ளன. அவ்வெளியே சாதாரண மாணவர்களுக்குத் தத்துவ நுட்பங்களில் ஆர்வம் ஏற்படச் செய்யும் கடினமான வேலையினை இந்தியா எளிதாகச் செய்து முடித்து வெற்றி கணடது" என்பதாகும்.

தத்துவங்களைக் கருப்பொருளாகக் கொண்ட கதைகள் அனைத்தையும் புராணங்கள் எனலாமா? கூடாது! ஏன்?

'புராணம்' என்ற சொல்லுக்குப் 'பழமை' என்பதே பொருள். இதைத் திருவாசகத்தில் காணலாம். சிவபெருமான், அனுதியே பழமையானவன். இதைக் குறிப்பிட வேண்டிய இடத்தில் அவனைப் 'புராண' என்றே குறிப்பிடுகிருர் மாணிக்க வாசகர். "புரம்பல எரித்த புராண போற்றி"—(போற்றித் திருவகவல், 221) என்பது அவரது வாசகம்.

வடமொழி அறிஞரும்கூடப் புராணம் என்பதற்கு இவ்வாறே பொருள் கொள்கின்றனர். வடமொழியில் 'புராணம்' என்பது 'புரா' 'நவ' என்ற இரு சொற்களின் சேர்க்கையாக விளங்குகிறது. 'புரா' என்பதற்குப் 'பழைய' என்றும், 'நவ' என்பதற்குப் 'புதிய' என்றும் பொருள. ஆகவே, புராணம் என்பதறகு, 'பழங் காலக் கதையாயினும் அது புதிய நலங்களை உடையதாக இருக்கும' என்று பொருள் கொளகின்றனர்.

எனவே, தத்துவங்களைக் கருப் பொருளாகக் கொண்ட கதைகள் பழங்கதைகளாக இருந்தால் மட்டுமே அவற்றைப் புராணங்கள் என்பர்.

புராணங்கள் பழங்கதைகள் என்ருல், அவை எத்தனைப் பழமையானவை? என்று கேட்கத்தோன்றும்.

அதர்வண வேதத்தில்தான் முதல் முதலாகப் 'புராணம்' என்ற சொல்

இடம் பெற்றுள்ளது என்று கூறுகிறார் ஆர். சி. அஸ்ரா எனபவர். (R. C. Harza, the Puranas, the cultural Heritage of India, the Rama krishna Mission Institute, Calcutta, volume II, part III, 1962 page-240)

வேதங்களின் பகுதிகளாகிய பிராமணங்களில் புராணங்களைப்பற்றிய வாக்கியங்கள் காணப்படுவதாக அறிஞாகள கூறுகினறனர் ("statement about Puranas are found even in the Brahmanas. Therefore it is to be surmised that Puranas exist even before historic times"-Puranic Encyclopaedia by Vettam Mani).

எனவே, வேத காலத்திலேயே புராணஙகள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டிருக்க வேண்டும என்று எண்ணுவது தவறல்ல. இதை, வி. ஆர். இராமச்சந்திர தீட்சிதரும் ஆமோதிக்கிறார். (கலைக் களஞ்சியம், தொகுப்பு-7, தமிழ் வளர்சசிக் கழகம் செனனை, 1960, பககம்-433)

வேத காலத்திலேயே புராணங்கள் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தன என்றால் அதற்கு முனபே அவை தோன்றி வளர்ச்சியடைநதிருக்க வேணடுமல்லவா? ஆம! தோன்றி வளர்ச்சியடைந்திருகக வேண்டும். அப்படி அவை தோன்றிய காலம் வேத காலத்துக்கு முற்பட்ட கால மாகும். அக்காலத்தை வரலாற்றுக் காலத்துககு முறபட்டகாலம என்பர்.

இவவரலாற்றுக் காலததுக்கு முற்பட்ட காலம் சிந்து வெளி நாகரிகமே என்பது தற்காலத்து ஆராய்சசியாளர்களின முடிவு. அது தமிழ் நாகரிகம் எனவும் அவர்க்குச் சிவமே பரம்பொருள் எனவும் சொல்லப்படுகிறது.

இது உண்மையாயின் வேத காலத்துக்கு முன்பே தமிழில் பழஙகதைகளாகிய புராணங்கள் இருந்திருக்க வேண்டும் என்று துணிந்து கூறலாம். ஆனல், அப்புராணங்கள் கிடைக்காமற் போயின. மேலும் அக்காலத்தில் தமிழிலிருந்த புராணங்கள் வடமொழியில் மொழிபெயர்த்து எழுதப்பட்டிருக்கலாம் என எணண இடமுணடு.

இப்படிப் பழமைமிக்கப் புராணஙகள் தொல்காப்பியர் காலத்தில் 'தொனமை' எனவும் 'தொல்' எனவும வழங்கப்பட்டுள்ளன. (தொல்—பொருள் — செய்யுளியல், சூததிரங்கள் 229, 230).

மணிமேகலையில் 'புராணம்' எனற சொல் இடம பெற்றுள்ளதைப் பார்க்குமபோது ("காதல் கொணடு கடல் வண்ணன்புராணம்,ஓதினனநாரணன் காப்பு என்று உரைத்தனன்"—சமயக் கணககா தம் திறங கேட்ட காதை, 98-99) காப்பியக் காலத்தில் அவை புராணம் எனறே வழங்கப்பட்டு பெருவழககில இருநதிருககின்றன என்பது புலனாகும்.

இப்படி, தமிழில் புராணங்கள் வரலாற்றுககு முறபட்ட காலத்திலேயே இருந்திருந்தாலும் கி. பி. 10 நூற்றாணடிலும் அதற்குப் பின்பும் தோனறி வளர்ந்த புராணங்கள்தான் இனறு நமக்குக கிடைப்பனவாக உள்ளன. அவை பெருமபாலும் வடமொழியில் இருநது மொழி பெயாக்கப்பட்டவையாகத்தான் விளங்குகினறன.

வடமொழியில் புராணங்களின எணணிககை 54 என்று கொள்வா. அவறறை மகா புராணஙகள், உப புராணங்கள, ஆதி புராணஙகள் என்று மூன்றாகப் பகுப்பர்.

இவற்றில் மகா புராணங்கள் 18 முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. இவற்றிறகு அடுததபடியாக உபபுராணங்கள் 18 முக்கியத்துவம் பெறுகின்றன.

"மகா புராணங்கள் குறிப்பிட்ட சமயச் சார்பு உடையனவல்ல; சிவன் விஷ்ணு முதலான கடவுளரை வழிபடலாம் என்றே அவைகள் கூறுகின்றன. உபபுராணங்கள் பிற் காலத்தவை. சமயச் சார்புடையவை. பதினெண மகா புராணங்களுககு உதவியாகத் துணையாய் இருபபதால் உப அங்கம் என்பது போல உபபுராணங்கள் எனப் பெயா பெறறன எனலாம். ஆதிபுராணங்களில உலகப் படைப்பு என்பது தனியிடம் பெறுகின்றது. பிரமமன் தாமரையில வீற்றிருப்பதையும், திருமால் அறிதுயில கொள்வதையும் விளக்கும். வேததததைப படைதத பிரமா முனிவரைப் படைத்தான. அவர்களால் தனது படைப்பு நோக்கம நிறைவேறாதது கணடு தானே ஆண உருவில் மனுவாகவும், பெண உருவில் காத ரூபையாகவும் மாறிப் பின படைப்புத் தொழிலை நடத்துகிறான எனககூறும்" (டாக்டர். ப. கோபாலன, பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் இலககிய மதிப்பீடு, இலட்சுமி பதிப்பகம், கோவை, 1983, பக்கம்: 20—21)

தமிழில் உளள புராணங்களில முதல் முதலில் 'புராணம்' என நாம அறியககிடப்பன புராண சாகரம, சாந்தி புராணம் எனபவையாகும். (மு. அருணசலம், தமிழிலககிய வரலாறு, 13-ம் நூறறாணடு, பக 234).

புராண சாகரத்தின காலம கி. பி. 10-ம் நூறறாணடு என யாப்பருங்கல விருத்தி தெளிவுறுத்துகிறது.

இவ்விரு நூல்களும மறைந்துவிட்டன. ஆனல், கிடைத்த சில சாந்தி புராணப் பாடல்கள் மட்டும புறத்திரட்டில் சேர்க்கப்பட்டுளளன.

இப்படித் தமிழில் புராணங்கள், கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் புராண சாகரத்தில் தொடஙகி வளாச்சி பெற்று 18-ம் நூற்றாணடில் உசச நிலையை அடைந்தன. 19-ம் நூற்றாண்டின இறுதியிலும் 20-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் தலபுராணங்களைப் பயிலும் ஆர்வம மககளிடம் காணப்பட்டது. அதன் பின

புராணங்களின் வளர்ச்சியும் குன்றியது; அவற்றைப் பயில்வோரின் தொகையும் குன்றியது.

இவ்வாறு, தமிழில் தோன்றி வளர்ச்சி பெற்று நிலவும் புராணங்களை நான்காகப் பகுப்பர் :

1. சான்றோர் வரலாற்றினை எடுத்துரைப்பன.

2. தெய்வங்களின் அருஞ் செயல்களைக் கூறுவன.

3. இறைவனின் செயலை ஒரு திருத்தலத்துடன் இணைத்து விளக்குவன.

4. காதிகள், நதிகள், மரங்கள், விரதங்கள் முதலியவற்றைச் சிறப்பித்துச் சொல்லுவன

மேற்கூறிய நான்கினுள் முதலும் கடையும் நீங்க இடையிரண்டும் தமிழ் இலக்கிய வரலாற்றில் கி. பி. 16-ம் நூற்றாண்டு முதல் ஐந்து நூற்றாண்டுகள் தொடர்ந்து வளர்ந்து புராண இலக்கிய வகைமையை வளர்த்துள்ளமையைக் காண்கிறோம். (டாக்டர் ப. கோபாலன, பரஞ்சோதி திருவிளையாடற் புராணம் இலக்கிய மதிப்பீடு, பக்கம்-14).

இத்தகைய புராணங்களைப்பற்றிய பலவகையான கருத்துக்கள் நிலவுகின்றன.

'புராணங்களா? அவை, குப்பை! குப்பை!' என்று ஒதுங்குவோர் சிலர்.

'புராணங்களா! அவை, புளுகு மூட்டைகள்! புளுகு மூட்டைகள்!' என்று எள்ளி நகையாடுவோர் சிலர்.

புராணங்களைப்பற்றிய இதுவும் இதுபோன்ற கருத்துக்களும், அப்புராணங்களைச் சரியான முறையில் அணுகாதவர்கள் கூறிய அவசரக் கருத்துக்கள்! அற்பக் கருத்துக்கள்!

அப்படியானால் புராணங்களை அணுகுவதற்கென்று தனியானதொரு அணுகு முறை உண்டா! ஆம்! உண்டு.

# ஜோதிட நூல்கள்

ஜோதிட சாஸ்திரம் என்பது பெரிய கடல் போன்றது. பார்ப்பதற்கு எளிமையாக தோன்றினாலும் உண்மையாகவே கடினமானது. நம் நாட்டில் ஜோதிடசாஸ்திரங்களைக் கற்றுக்கொள்ள. 45வகையான நூல்கள் இருந்தன.

அவை :

1. வருஷாதி நூல், 2. சூடாமணி உள்ளமுடையான், 3. பிரத்யப்த்த பஞ்சாங்க சரளி, 4. பிருஹத்சம்ஹிதா, 5. பராசரஸ்மிருதி, 6. சிந்தாந்த சிநதாமணிர்நாமஜோதிஷ கிரந்தம், 7. தர்மசிந்து, 8. நிர்ணய சிநது, 9. வரருசிஸம்ஹித, 10. வைத்யநாத தீக்ஷீயம், 11. புருஷார்த்த சிந்தாமணி, 12. தோழப்பர் ஸ்மிருதி முக்தாபலம், 13 விரத சூடாமணி, 14. தெயவக்ஞ காமதேனு, 15. நிர்ணயாமிருதம், 16. சதுர்வாக்ய சிந்தாமணி, 17. விரதராஜ நிபந்தனம், 18. முனிரத்னஜயந்தி, 19. துவைத நிர்ணய சித்தாந்த சங்கிரஹ, 20. வர்ஷ கிருத்யாதீபிகா, 21.விரதவல்லாரி, 22. விரதகால நிர்ணயம், 23. ஜெயசிம்மகல்ப துருமம் 24. சிரார்த்தவிவேகா, 25. சிரார்த்தகல்பலதா, 26. விரதகல்பாமிருத சிந்தாமணி, 27. சுபாஷித பாண்டாகாரம், 28. சைவ பூஷணம், 29. காமிகாகமம், 30. சித்தாந்த சாராவளி, 31. பாரார்த்த நித்ய பூஜாவிதி, 32. சிவார்ச்சன சநதிரிகை, 33. காரண ஆகமம், 34. பத்ம புராணம், 35. மரீஷிசம்ஹிதை, 36. விரதாதி கால நிர்ணயம், 37. விரதார்க்க, 38. விரத சதுஷ்டயம், 39. விரததானுதி விஷயவசநாரி, 40. விரத சுவரூப பலவர்ணம், 41. விரதோத்யயன, 42. காலவிதானம், 43. காலாமிருதம், 44. காலப்பிரகாசிகா, 45. முகூர்த்த தர்ப்பணம் முதலியனவாகும். தற்போது வருஷாதி நூல் மட்டுமே கிடைக்கிறது. மற்றவை கிடைப்பது அரிதாக இருக்கிறது. இந்த நூல்களை வைதது இருப்பவர்கள் நன்முறை பாதுகாத்து வைத்திருந்தால் அதிலிருநது பலஅரிய விஷயங்கள் நமக்குக் கிடைக்கும். திரு. ஜி. ஸ்ரீனிவாசன், சென்னை—50

அதென்ன அணுகு முறை?

புராணஙகள் வரலாற்றுக் காலத்துககு முநதைய காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வநதுள்ளன எனறு கணடோம். பல நூற்றாண்டுகளைக் கடந்து அவை இன்றும் நின்று நிலவுகினறன.

இப்படி அம்மெய்ப் புராணங்கள் பல நூற்றாண்டைக் கடந்து வரும் போது அவற்றில் போலிப் புராணங்களும் இடைச் செருகல்களும் கலப்பது இயல்பு. இது குறித்துத் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்கள்,

"புராணங்கள் முதன்முதல் நன்னோக்கத்துடன் எழுதப்பட்டன. நன்னோக்கத்துடன எழுதப்பட்ட புராணங்களில் இயற்கை உண்டு; பாட்டு உண்டு; இறை உண்டு; வாழ்வு உணடு; அறம உணடு; ஒழுக்கம் உண்டு; அனபு உண்டு; எல்லாம் உணடு. புராணங்களின உட்கிடக்கையை யோராது, பினனே பாட்டுப் பாடப பயின்றோரெல்லாரும் புராண நாடகத்தில் புத்தி செலுத்தி நடிக்கத் தொடங்கினர். அவரால் புராணம் பெருங்கூத்தாக முடிந்தது. சமய வெறியர் பலர், பிற சமயக் கடவுளர் நிந்தனை யொன்றையே குறிக்கொண்டு, போலிக் கதைகள் புனைநது புராணம் பாடத் தொடங்கினர். காமுகர் சிலரும் புராணம் பாடி

# கர்வபங்கம்

ஒரு நாள் அர்ஜுனனும், அனுமனும் ஓர் ஓடையின் கரையில் சந்திக்க நேர்ந்தது. அப்போது, அவர்களுக்குள் ஏற்பட்ட சர்ச்சையில் அவர்கள் இருவரில் "வலிமையில் சிறந்தவா எவர்" என்ற போட்டியும், பந்தயத்தில் தோற்பவர் பிராணத்தியாகம் பண்ண வேண்டும் என முடிவு செய்தனர்.

அதன்படி அர்ஜுனன் அந்த ஓடையின் மீது தன்னுடைய அம்புகளைக் கொண்டு ஒரு பாலம் அமைத்து அந்தப் பாலத்தை "அனுமனால் ஏறி நின்று உடைக்க முடியுமா" என்று சவால் விட்டான். அனுமனும் அந்த சவாலை ஏற்றுக் கொண்டு, அடக்கத்துடன், அவருடைய இதய தெய்வமாகிய ஸ்ரீ ராம பிரானை வணங்கி, அந்த பாலத்தின் மீது ஏறி நின்று 'ஹே! ராம்!' என்று கூறி ஒரு குதி குதித்தார். உடனே அந்தப் பாலம் நொறுங்கி உடைந்துவிட்டது.

அதைக் கண்டு அவமானம் அடைந்த அர்ஜுனன் தோல்வியை ஒப்புக்கொண்டு, விறகுகளை அடுக்கி, தீக்குளித்து இறக்கச் சித்தமானான்.

அப்போது பகவான் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா, அங்கு ஒரு பிராமணனின் உருவில் தோன்றி, அர்ஜுனனை தடுத்து, அவனுடைய தோல்விக்குச் சாட்சி இல்லாததால், அவன் அவ்வாறு பிராணத்தியாகம் செய்யக் கூடாது என்றும், அவர்களுடைய போட்டியை மீண்டும் ஒரு முறை அவரது முன்னிலையில் செய்தால் அவர் தீர்ப்புக் கூறுவதாகவும் கூறினார்.

அர்ஜுனனுக்கு ஏற்கனவே ஏற்பட்ட தோல்வியினால் மனத்தில் பயமும் அவமானமும் அடைந்திருந்தான். அவனுடைய கர்வமும் அடங்கியிருந்தது. ஆதலால் இந்த முறை இறைவனை வணங்கி, மிகுந்த பய பக்தியுடன் பாலத்தை அமைத்தான். ஆனால், அனுமனுக்கு தனக்கு ஏற்பட்ட வெற்றியினால் தனதுபலத்தில் மிகுந்த நம்பிக்கைஏற்பட்டிருந்தது. அதனால் இந்த முறை அலட்சியத்துடனும், சர்வத்துடனும் அதன் மீது ஏறி நின்று குதித்தார். பாலம் சிறிதும் அசையவில்லை. கர்வத்தால அவமானமடைந்த அனுமன் தோல்வியை ஒப்புககொண்டு பிராணத் தியாகம செய்யத் தயாரானார்.

அப்போது, பிராமண வடிவில் இருந்த கண்ணபிரான் அனுமனைத் தடுத்து, தனது உண்மை சொரூபத்தைக் காட்டி, அவர்கள் இருவருடைய அகந்தையை அகற்றவே அவ்வாறு செய்ததாகக் கூறி, அவர்களுக்கு புத்தியும் புகட்டினார்.

## கோவில்

ஆண்டவன் உஙகள் இதயக் கோவிலிலே வசிப்பவன். அதனால் இதயத்தை கோவிலாக அமைத்து ஆங்கு அவனை வழுவாது வழிபடுங்கள். அவனை நாடி வேறு இடம் செல்ல வேண்டாம். —சுவாமி சிவானந்தா.

தகவல்: திருமதி. கமலா மாரியப்பன், கோயமுத்தூர்.

யுள்ளனர். இப்புராணங்களிலுள்ள வருணனைகள், மொழி அன்னையின் எழில் முகத்தில் அம்மைப் புள்ளி வார்த்து, இயற்கையை மறைப்பன வாயின; கதைகளோ, விலங்கும் வெறுக்கத்தக்கன. இப்போலிப் புராணங்களால் மொழிக்கும், கடவுள் நெறிக்கும், வழக்க ஒழுக்கங்கட்கும் கேடு விளைந்தது என்று சுருங்கச் சொல்லலாம்" (முருகன் அல்லது அழகு, பக்கம், 127)

என்று கூறியுள்ளது இங்கே எண்ணத் தக்கது

இந்நிலையில் உண்மைப் புராணங்கள் எவை? போலிப் புராணங்கள் எவை? என்று ஆராய்ந்து அறிந்து உண்மைப் புராணங்கள் ஏற்றுக் கொண்டு போலிப் புராணங்களை விலக்குவதே முறை.

அப்படியின்றி, போலிப் புராணங்களை மட்டும் கருத்திற் கொண்டு புராணங்கள் என்றாலே அவை அனைத்தும் போலியானவை என்று கருதுவதும் அதனால் அவற்றைத் தள்ளிவிடுவதும் நம் பழஞ் செல்வத்தை இழப்பது போலாகிவிடும்.

இதோடு இன்னொரு தெளிவோடும் புராணங்களை அணுக வேண்டும்.

உண்மையான புராணங்கள், பெரும்பாலும் புனைந்துரைகள், கற்பனைகள் அல்லது சில நிகழ்ச்சிகளின் அடிப்படையில் எழுந்த கதைகளாகும் என்று முன்பே கண்டோம். இத தெளிவோடு அணுகும்போதே, புராணங்களில் வரும் கதைகள் முக்கியத்துவம் பெறாது ஒழியும். அப்படிக் கதைகள் முக்கியத்துவம் பெறாத போது அவற்றில் மறைந்துள்ள கருத்துக்கள் முக்கியத்துவம் பெறும். கருத்துக்கள் முக்கியத்துவம் பெற வேண்டும். அதனால் பயன் விளைய வேண்டும் என்பதற்காகவே புராணங்கள் எழுந்தன.

(40-ம் பக்கம் பார்க்க)

# தத்துவராயரின் பாடுதுறை

## முன்னுரை:

தமிழ இலக்கிய வரலாற்றில் சங்க ரரின் அத்துவைத வேதாந்தக் கருத் துக்களைப் படைத்த பெருமை உடை யவர் தத்துவராயர். சைவ சித்தாந்தி கள் அத்துவைதத்தை மாயாவா தம் என்று பெயரிட்டுக் கண்டனம் செய்வர். கி. பி. 13-ஆம் நூற்ருண டில் ஸ்ரீ பட்டனுர் விருத்தயாப்பில் பகவத் கீதையைப் 'பரமாாத்த தரி சனம்' என்ற பெயரில் பாடியதுடன் ஆதிசங்கரரின் அத்துவைத நெறிக் கேற்ப உரையுஞ் செய்தார். இது தான் முதலில் தமிழில தோன்றிய அத்துவைத வேதாந்த நூல். இதனை யடுத்து, 15-ஆம் நூற்ருணடில் தத்து வராயர் தமிழில அத்துவைத வேதாந்த நூல்களை மிகுதியும் செய் தார். தத்துவராயர் தமிழ நடையில் அத்துவைத வேதாந்தபரமாகச செய்த நூல்கள் அனைத்தும் அடங கல் முறை, பாடுதுறை எனறு தொகுக்கப்பெறறன. இவை தவிர உலகிற்காக வேதாந்த நூல கருத் துக்களைப பரப்பும பொருட்டு இவர் தொகுத்த இரு பெருநூற்கள பெருந் திரட்டு, குறுந்திரட்டு என்பன. இவையிரணடிலும் சைவ வைணவ பேதம் இனறி, திருமுறை, திவயபிர பந்தம் உள்ளிட்ட பல பாடல்களைத தொகுத்தும் தாமே எழுதியும் திரட் டினர். அடங்கல்முறை என்பதில் திருத்தாலாட்டு,பிளளைத் திருநாமம, வெணபா அநதாதி, கலித்துறை அந தாதி, சினனப்பூ வெணபா, தசாங் கம்,இரட்டை மணிமாலை, மும்மணிக கோவை, நான்மணிமாலை, கலிபபா, ஞானவினேதன கலம்பகம், உலா, சிலேடையுலா, நெஞ்சுவிடுதூது, கலிமடல், அஞ்ஞவதைபபரணி, மோகவதைப்பரணி, அமிர்தசாரம் ஆகிய 18 நூற்கள் உள்ளன. பாடு துறை என்பதில் 138 தலைப்புக்களில் 1140 பாடலகள் உள்ளன. இவை தவிர, சிவப்பிரகாச வெண்பா, தத்து வாமிர்தம், ஈசுரகீதை, பிரமகீதை என்பனவும் இவர் செய்தவை.

தத்துவராயரின பாடுதுறையில் பல்வேறு யாப்பு வகைகள் உளளன. இசைத்தன்மை மிக்க, நாட்டுப்புறப் பாடல் அமைப்பில் உள்ள பாடல் கள் மிகுதி. பினனர்த் தோன்றிய தாணடவரின கைவல்யநவநீதம் (கி. பி. 17-ஆம் நூற்ருணடு) நூலும் தத்துவராயரின பாடுதுறை நூலும் வழிபாட்டுப் பாடல்களாக - குழுப் பாடலாகத் (பஜனைப் பாடலாக - கோஷ்டிப் பாடலாக) தமிழ்நாட்டில் அததுவைத மடங்கள் பலவற்றிலும் பாடபபட்டு வருகின்றன. கைம் பெண் பலர் தம்முள் கூடி வழிபாட் டினபோது இப்பாடல்களைப் பாடு மளவிற்கு இவை மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெற்றிருந் தன எனறு டாகடர் தெ. பொ. மீ. கூறுவார். இக்கட்டுரை, தத்துவரா யரின் பாடுதுறை நூலை ஆயும்முறை யில் உள்ளது

தத்துவராயர் தம் குருவான ஸ்வ ரூபானந்தசுவாமிகளைப் பிரிந்து சென்றபோதும் மீண்டும் அவர் திரு வடிகளில வந்து வீழ்ந்து வணங்கிய போதும் பாடிய பாடல்களின தொகுபபு பாடுதுறை. இந்த நூல் இசைப்பாடல தொகுப்பாக உள்ளது. குருவணக்கமாக அமைநத பாடல் களில் திருவடிமாலை, திருவருட்கழல் மாலை, போற்றிமாலை, புகழ்ச்சிமாலை, துவாதசநாம சங்கீர்த்தனம், நமஸ் கார சங்கீர்த்தனம், போற்றி சங்கீர்த் தனம், திருநாம சங்கீர்த்தனம, அருட் கழல் விளக்கம், அபயம், சரணம், அபயவரதம், சீர்பாதவல்லபம், திரு வநதிக் காப்பு, திருநீற்றுக்காப்பு முதலியன உள்ளன. இவ்வகையில் அமைநதவை 39 தலைப்புக்களிலான வை ஆகும்.

முந்தைய பக்தியிலக்கியக கவிஞர் கள் போலவும் அகப்பொருள் சிற்றி லக்கிய மரபில் சில பாடியுள்ளார். கனவுரைத்தல், குறி, பாங்கிக்குரைத் தல, தாயவார்த்தை, தோழியுரைத் தல், குறையுரைத்தல், வரவுசாற்றில் அருமையுரைததல், வளவியுடன் படுத்தல், நற்குறி, பல்லி, கொடி, கோழி, கடல், கிளிபபயிறறு ஆகிய தலைப்புக்களில அமைந்துள்ள பாடல் கள் இவ்வகையின. இவை தவிர, காப்புககுறியுரைத்தல், அறுதி உரைத்தல், பலலி, கொடி, கோழி கிளிப்பயிறறு என்பன புதியன.

'காரணற் காணுக் கரணதது இகழ்ச்சி' எனற தலைப்பில் உள்ள 10 பாடல்களும் ஆயசசியர் குரவை அமைப்பில் உளளன.

அருட்பத்து, குயில், அன்னைப் பத்து, அசசோ, சாழல், அம்மானை, எம்பாவை/திருவெம்பாவை, திருப் பளளியெழுச்சி, திருவுநதியார், பிரார்ததனை, உயிருணி என்பன திரு வாசக அமைப்பில் பாடப்பட்டவை. தத்துவராயரின் அருள்நெறி என்ற தலைப்பில் அமைந்த பாடல்கள் திரு வாசகத்தின் திருப்படையாட்சியை யும், போற்றிமாலை, போற்றி நாம சஙகீர்த்தனம் ஆகிய இரணடும் திரு வாசகத்தின் போறறித் திரு அகவலை யும் அடியொற்றிப் பாடப்பட்டன.

திரு. டாக்டர். எஸ். வெஙகடராமன்,
மதுரை.

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுபரபாதம (ஸ்தோதரம், ப்ரபததி, மங்களா சாஸனஙகளுடன) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன | 0—75 |
| 3 | அனனமய்யா ஓா அறிமுகம டாக்டர். பொன். சௌரிராஜன டாக்டர். கே. சாவோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5 | இந்து சமயக் கையேடு (தமிழாககம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸநதானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. | கணணன் பேசுகிருன் —நஜன | 0—50 |
| 10 | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேஙகடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம | 0—62 |
| 2. | அலங்கார ஸஙரஹம் —சி. கே. பாஸ்கரராவ | 16—00 |
| 3. | கடோபநிஷத —டாகடர். கே. சி. வரதாசாரியாா —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4 | கரியாதிகாரா — தொகுத்தவர் : டாகடா. எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5 | மாாககணடேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | பரஸனேபநிஷத | 11—00 |
| 7. | ஸ்ரீ வேஙகடேஸ்வர சுப்ரபாதம | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாஙக்யானம —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சாமா | 30—00 |

மேற்படி நூலகளுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம. ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம. வி. பி. பி. மூலமாக நூலகள் அனுப்புதல் இயலாது. நூல்களுககு "உதவி செயலாட்சித் தலேவர்(எஸ), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருபபதி" எனும முகவரியுடன ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

திருப்பல்லாணடு எனபது பெரியாழ்வாரின திருப்பலலாணடையும, மநோரதம், ஏவலிலாககரணத் திகழ்ச்சி ஆகியவை குலசேகர ஆழவாா திருவேஙகடத்தெமமானேடு தொடாபு படுத்தி, எம்பெருமான் 'திருமலேயில் ஏதேனும் ஆவேனே' எனறு பாடியதைப் பினபற்றியும் அமைந்தவை. அதேபோலப் பெரியாழ்வார் பாடிய பன்னிருநாமப் பாட்டு என்பதைப் பின்பற்றித துவாதசநாம சங்கீர்த்தனம் பாடியுள்ளாா. கனுவுரை எனபது ஆணடாளின நாசசியார் திருமொழியில் உள்ள 'வாரணமாயிரம்' பாடல்களேப் பின்பறறி 'கனுக்கணடேன் தோழி நான' எனற ஈற்றுத்தொடரை அப்படியே பாடல தோறும அமைததுப் பாடியுள்ளார்.

சிவப்பிரகாச சுவாமிகள் ஸ்வருப்ானந்தர் மீது பெருமாள் என்ற தலேபபில் 17 பாடல்கள் பாடியுள் ளார் 'காலதிசை தேசமெல்லாங கடந்துநின்ற பெருமான்' என்ற அமைப்பில் நான்கடிகள் உடையதாக அடிதோறும் ஈறறுச்சொல் 'பெருமாள்' என்று வருகிறது. வைணவத் திருககோயில்களில் நடைபெற்று வரும அரையர்சேவையில் பாடப் பெறும் 'சொல்லினுல் மகரமொழுகப் பாடக்கொல்லிக் காவலன் பரவும பெருமாள்' என்பதாக வரும் கொணடாட்டம் என்பதைப் பின்பற்றியது இந்தப் பெருமாள பாட்டு. 'குறதநதி' என்ற தலேப்பில வரும் 10 பாடல்களும் அரையரின் முததுக்குறியில் வரும் கட்டுவிசசி (குறத்தி) தன்னே அறிமுகஞ் செய்து கூறுமிடததில் பாடும பாடலகளேப்போனறு அமைந்தவை.

" கேடுபடும உடலதனககுக்
கிழாய கிழங்குகல்லிக்
காடு மலேயும கருதியிடுங்
குறத்தியலலேன்
பாடும் மறையிற் பரமபிரமமும்நானும
கூடும் வகைதேடிக் குனித்திடும்
குறத்தியேனே "

என்பது பாடுதுறையில் வரும் குறத திப்பாட்டு. இது, அரையரின முத துக குறியில வரும,

"வாராய் மகளே! உன் வயிறறிலே
பிரசை உணடு எனறு
ஏலாதன சொலலி இரந்துஈ
ணும குறத்தியல்லேன்
நாராயணனோடே நாலிரண்டு
எழுதது கற்ற
சீரா அருளமாரி திறமபேசும
குறததி நானே"

எனற குறத்திப் பாட்டின அடியொற் றியதாகும் முதலிரு அடிகளில் பிற உலகியல் குறத்தி போலத் தான் அல லேன் எனறு கூறிவிட்டு, பின்னிரு அடிகளில் உடன்பாட்டு முறையில் தன்னை அக்குறததி அறிமுகஞ்செயது பாடுவது உளளது. இவ்வமைப்பு இவ்விரு (அரையரின முத்துக்குறி யில் வரும் குறத்திப்பாட்டு, தத்துவ ராயரின் குறததிப்பாட்டு) பாடல் களில் மட்டுமே காணப்படுகிறது.

சங்கீர்த்தனம் என்ற பொதுத்தலைப் பில் பாடுதுறையில் சிவசிவ சங்கீர்த்த னம், துவாதசநாமசங்கீாத்தனம, நமஸ்கார சங்கீர்த்தனம், போற்றி சஙகீர்த்தனம, திருநாம சஙகீர்த்த னம் ஆகிய ஐந்து உள்ளன. சிவசிவ, போற்றி, நமஸகாரம், நமோநம, மஹாதேவம், சரணம் சரணம் எனறு அடிதோறும் ஈறறுசசொல் பயின்று வருகின்றது. பாட்டுடைததலைவன (இறைவன் அல்லது குரு) புகழ்பாடு வதும் ஊடே அத்துவைதக் கருததுக கள் கலநது வருவதும இதன் பொதுத் தன்மை. இசைக்கூறு மிகுள்ள பிற் காலத்தில் தோன்றிய பஜனைப் பாடலகளுககுத் தததுவராயரின் இப்பாடல்கள தோற்றுவாயாக அமைநதவை.

இறைவன அல்லது குரு (ஸ்வரு பானந்தா/சிவப்பிரகாசர்) அருள் வேண்டி அமையும பிரபந்தங்கள் என்ற அமைப்பில் பல உள்ளன. 'மாலை' எனனும பிரபந்த அமைப்பில் திருவடிமாலை, திருவருட்கழல்மாலை, போற்றிமாலை, புகழ்ச்சிமாலை, பழிததுரைமாலை, அனுபவமாலை ஆகிய ஆறு உள்ளன. அடிமடகருஸது தி, நிநதாஸதுதி என பவையும், போற்றிப் பாடல்களில் வேறு வரிகளான பிரார்த்தனை, அடைக்கலம், அபயம், அபயவரதம், குறை வல்லபம், சீபாத வல்லபம என்பன அருள்வேண்டியும் பாட்டு டைத்தலைவன் புகழ்பாடியும் அமைந் தன. திருப்பல்லாணடு, திருவந்திக் காப்பு, திருநீற்றுக்காப்பு ஆகிய மூன றும் தமககருள் செய்த இறை வனுக்கு குருவிறகுககணணேறு பட்டு விடக்கூடாது என்று பாடிய பாட்டுக் களாகும்.

அனுபூதிநிலையம்,வாழ்ககைப்பாடு, சநநியாசம், தபோவனம், முத்திரை, வீட்டுநெறி, மனம், ஞானகாண்டம் பகவதி, சுதந்தரன், கன்மகாண்டம், அவித்யாபிரலாபம் ஆகியன நேரடி யாக அத்துவைதக் கருத்துக்களைப் பேசுகின்றன.

"தன்னிலே யெல்லாம் இருக்குமமாகிற
தானெலலாத் துளளும் இருப்ப
ஞகிற்
பினனிலன் முனனிலன் ஆவ ஞகிற்
பெரிது முடிநததென வாழக்கைப்
பாடே"

என்று வாழ்க்கைப்பாடு என்பதில் நேரடியாக எளிய சொற்களில் அத் வைத சிததாந்தக் கருத்துக்களைக் கூறுகிறார். இதுபோலவே சந்நியா சம் என்பது அமைந்தாலும, அதில் 'பிடாரர்' எனற ஒரு மாந்தரை விளித்துப பேசுவதாக அமைத்து, புறச் சடஙகுகள, ஒழுக்கங்களால் பயனில்லை எனறு பாடுகிறார்.

"செநதுகி லுமதணடும நீர்தரித்துச
சிகைநூல ஒசிதது செபஙகளபண்ணி
முந்திநீர் நீரினிற காக்கைபோல
முழுகித் திரியும் பிடார நீரே
பெந்தகா யமமல நீரின்முழுகிப்
பிரளய காலஞ் செபித்தக காலும
வந்துணர் வாய பிரமம்ஆமோ
மதித்துநீர் பாரீர் பிடார நீரே"

என்று வரும் சநநியாசம் பாடல் இத னைக் காட்டும். இதில் புனித நதிக ளில்நீராடல், ஓமஞ்செய்தல், செபித் தல், சிகைதரித்தல், காவி கமணட லந் தரித்தல் உள்ளிட்ட அனைத்துப் புற வேடம், சடங்குகள், மரபான சமய நம்பிக்கைகள் ஆகிய அனைத்தை யும் சாடுகின்றார். இறைவன அருள பெற மனம் ஒன்றிய வழிபாடு தவிர வேறு எவையும் உதவா என்பதை வலியுறுத்துகிறார். 'அவித்யா பிர லாபம' என்ற தலைப்பில் வருகின்ற பத்து பாடல்களிலும் 'ஆண்டே' எனறு ஈற்றுச் சொல் அமைத்துப் புலம்புவதாக (பிரலாபம்—புலம்பல்) அமைந்துள்ளது

எஞ்சிய பிரபந்தங்கள் யாவும் ஆடல் அடிப்படையில், இசைக்கருவி கள் அடிப்படையில, தொழில், தொழிலை அடிப்படையாகக்கொண்ட சாதி அடிப்படையில் தலைப்பிடப்பட் டவை. இவை அனைததும் நாட்டுப் புற இலக்கிய வடிவங்களாக உள்ளன. இவ்வகைப் பிரபநதங்கள்—மக்கள் இலக்கியமான வடிவங்கள—மூலமாக மக்களுக்கு வேதாநதக் கருத்துக்களை எடுத்துக் கூறுகிறார் தத்துவராயா

அரும்பதவுரையாசிரியரும் அடியா ருக்கு நல்லாரும பிரபந்தம் எனப தைக் கூத்துடன் சார்த்திப் பேசுகின் றனர். 'அகக் கூத்திற்கு உருவாவன கந்த முதலாகப் பிரபந்தவுரு ஈறாக இருபத்தெட்டும்' என்பது அரும் பதவுரை. 'பிரபநதம் எனபது அடி வரையினறிப் பலதாளத்தாற் புனர்ப் பது' என்பது அடியார்ககுநலலார் கூறும விளக்கம. மேலும், அவரே பல்வரிக்கூத்தின் விளக்கமாக நீண்ட மேற்கோள் பாடல ஒனறைத தரு கிறார். அதில் பல்வகைப பிர பந்தங்களைத் தருகிறார். இவர் கூறும் அப்பல்வேறு பிர பந்தங்களுக்குரிய சானறுகளைப் பாட்டியல் நூற்கள் எதுவும் தர வில்லை. இசையும கூத்தும் கலந்த ஒன்றாகப் பிரபந்ததசை இவ்வுரை யாசிரியர்கள் விளக்குவதை அடிப்

படையாகக் கொண்டு காணின், மக்களின் வாழ்வோடு ஒன்றிய இசையும் கூத்தும் கலந்த வடிவமாக அமைவது பிரபநதம் என்று பொருளபடும். இவ விளக்கம் தத்துவராயர் பாடியவற்றிற்குப்பெரிதும் பொருந்திவருகிறது. அடியார்க்கு நல்லார் கூறும் நூற்றுக் கணக்கான பல்வரிக் கூத்துககளுக்கான பாடல்கள் அவர் காலத்திற்கு முனனரும் அவர் காலத்திலும் இருந திருக்கக்கூடும். மக்கள தத்தம் தொழில் ஆறறுகையிலும் விளையாட்டின் போதும் பாடப்பட்ட பல்வகைப் பிரபநதங்கள இவை. இவற்றில் பாம் பாட்டி, பறை, குரவை, அம்மானை, பந்து, கழங்கு, பிடாரன், பகடி, பகவதி, சாழல், உந்தி, குணலை, கழல், மால் ஆகியவற்றில் பாடுதுறையில் பாடல்கள் உவ்ளன. அடியார்க்கு நல்லார் கூறும் பல்வரிக்கூத்தின்குலம் எனப்படும் இவ்வகை இலக்கியஙகளுக்கு இலக்கணத்தையோ சானறுப் பாடல்களையோ பின்னர்த் தோனறிய பாட்டியல் நூல்கள் கூறவில்லை. இப்பாடல்கள் யாவும் இசையும் கூத்தும் கலநதவை. தம்முடைய கருத்துக்களை வெளிப்படுத்த மக்களிடையே வழக்கிலிருந்த இவவகைகளைத் தததுவராயர் எடுத்துப் பாடினார்.

குரவை, குணலை, பகடி, பந்து ஆகியன கூதது (ஆடல்) சார்ந்தவையாக உள்ளன. பநது, குணலை ஆகிய தலைப்புக்களில இரண்டிரண்டு பிரபநதங்கள் உள்ளன. இவறறின் ஈறறடியில் முறையே 'குரவையிடு' 'என்றிடு குணலை' 'என்றிடு பகடி' 'பாவை நல்லீர் பநதடிகக வாரீர்' என்று வருகின்றன.

சில பிரபந்தங்களுக்கு இசைககருவிகள் அடிப்படையில் பெயரிடப்பட்டுள்ளன. இவ்வகையில் இம்பில, காளம், பறை ஆகியன உளளன. இவறறில் ஈறறடியில் முறையே 'இம்பிலடி' 'ஊதேடா காளம்' 'அறையுமோடா பறையை' எனனும் சொற்கள் பயின்று வருகின்றன.

ஏனையவற்றில் தச்சராணடு, தச்சாணடி, செட்டியார், பிடாரன், அமபட்டன, வண்ணன, முதலியார், தச்சன், பாம்பாட்டி, தட்டான, பார்பபானும் பறைச்சியும, பறைச்சியும் பறையனும் எனும் பனனிரு பிரபந்தங்களும் தொழில்அடிப்படையில் உருவான சாதியமைப்பை வைத்துப்பெயரிடப்பட்டன. இவை அனைத திலும் சாதியமைப்பைச சாடுகின்ற பாங்கு உள்ளது. இச்சாதியமைப்பு, சாதிபபெயர், தொழில் என்பன யாவும் இவ்வுலக வாழ்க்கையுடன் கூடிய இநத உடமபு பற்றியன. இவற்றால் வரும் பேதங்களை அவர் சாடுகிறார். எலலாவற்றிலும் தனனையும் தன்னில் எல்லாவறறையும் காணும் பக்குவ நிலையைப் பாடுகின்றார. 'உன்றன் இடத்திலும ஊராா இடததிலும உலகம் பதினாலும் உளள ஒரு பொருள் தனனைக் காட்டித தந தாா' எனறு வரும் அடி இதனை வலியுறுத்தும். 'கடையிலும் இருப்பார் இந்தச் செட்டியார் கணடிடம் எங்கும் உள்ளாரிச செட்டியார்' என்று வரும் அடியும் இதனைக் காட்டும்.

இவற்றில், இன மக்களை மாந்தராககி அவர்களின தொழிலைப்பற்றிப் பாடுவதான கவிக்கூற்றுஅமைப்பு உள்ளது.

பாாப்பானும் பறைச்சியும, பறையனும் பறைசசியும ஆகிய இரு பிரபந்தஙகளில் மட்டும இரண்டு மாந்தர்கள் உரையாடும் அமைப்பு உள்ளது. பறையனும் பறைசசியும் என்பதும இருமாநதர் நேரடி உரையாடல அமைப்பில உளளது.

'' சாதிகுல பேதமறச சஙகை
யறத்தெரிநது
சநதான வுபதேசநதந்தாராா
பறையா
நீதியினால உணர்வேயாய
நித்தசுத்த மாகிய
நின்மலனும அப்பனென்று
அறியாயோ பறைச்சி ''

இவ்வாறு பன்னிரு பாடல்களிலும் பறையனிடம் வினவுவதும பறைச்சிக்கு அவன பதிலிறுப்பதுமாக உள்ளது. பினனாளில குறவஞ்சி நாடகஙகளில் குறிசொல்லிப பரிசு பெற்று வந்த குறததியிடம் குறவன் வினவுவதும குறத்தி பதிலிறுப்பதுமாக வரும் பாஙகு இதன் வளர்ச்சிதான. இதில் இருமாநதர்களும முரணபாடினறி வினவுதலும் விடைபெறுவதுமான அமைப்பு உளளது. கீர்த்தனை, விலாசம, பளளு, குறவஞ்சி நாடகஙகளில் வரும் சம்வாதம், உத்தர பிரதியுத்தரம் போன்ற அமைப்பு இது.

ஆதிசங்கரரின் அத்துவதை வேதாந்தக் கருத்துககளைத் தமிழில பாடும இககவிஞரின் இப்பிரபந்தம - பார்ப்பானும் பறைசசியும் - ஆதி சங்கராா பாடிய மநீஷபஞ்சகம் எனற பிரபநதத்தை நினைவூட்டுகிறது. ஆதி சங்கரர், கங்கை நீராடச் செல்லும் போது எதிரே வநத புலையனை, 'ஒதுங்கிப்போ' என்று சொலல, சாதி உடம பிற்கா? உள்ளிருக்கும் ஆன்மா அனைவர்க்கும் ஒன்றல்லவா என்று அவன கூற, அவா அப்புலையனைத் தம் குருவாக ஏறறு உபதேசம் பெற்றதையும் தம்முடைய மநீஷபஞசகம் பிரபந்தத்தில் கூறுகிறா.

## முடிவுரை :

தததுவராயா அத்துவைத வேதாநதக் கருத்துக்களை மிகுதியாகத் தமிழில் பாடினா. ஏராளமான யாப்பு முறைகளைக் கையாண்டு பிரபநத வகைகளை இவா பாடியுள்ளார். இவருடைய மரபு வழியான பாடல்களை அடஙகல் முறையிலும புதிய பிரபநதஙகளைப் பாடுதுறையிலும் காணகிறோம. பாடுதுறையில் உளள பிரபநத வகைகளில் சில திருவாசகத்தில் உள்ள வகைகளைப் பின்பற்றுகினறன; சில திவ்வியப் பிரபநத வகைகளைப் பினபற்றுகின்றன. இன்னுஞ் சில வைணவத் திருக்கோயில

(36-ம் பக்கம பார்க்க)



# காஞ்சி ஸ்ரீ காமாக்ஷியின் மகிமை

காஞ்சி ஸப்தபுரிகளில் ஒன்று. அது ஒரு மகாபீட ஸ்தானம். மேலும் இந்த ஸ்தலத்தில் இவ்வளவு பெருமைக்கும் முக்கிய காரணம் அதன் நடுநாயகமாக அமைந்துள்ள ஸ்ரீ காமகோடி ஆலயம்தான். இவ்வுலக உயிர்கள் உய்ய வேண்டி, அவைகள் வேண்டியதை வேண்டிய வண்ணம் ஈந்து, ஸ்ரீ காமாட்சி எனறும், காமகோடி எனறும் பெயர் பெற்று இங்கு எழுநதருளியிருககிருள். அதனுலேயே இத்தலத்தை ஸ்ரீபுரம், பத்மநாபகம், ஜீவன் முக்திபுரம், காமகோட்டம், பஞ்சபாண நிகேதனம் எனப பல பெயரிட்டு பக்தாகள் அழைக்கின்றனர்.

மகா சக்தி பீடங்கள

இவ்வுலகம் சக்திமயமானது. பராசக்தியின் சொரூபமாய் இலங்குவது. எனினும், இவ்வுலகிலுள்ள தேவிக்கான 6400 சக்தி பீடஙகளுள் 64 பீடங்களே முக்கியமாகக கருதப்படுகின்றன. அவற்றுள்ளும் சிறந்த 56 பீடங்களுள் 35 பீடங்களே நனி சிறந்தன என்பர்.

அவற்றுள்ளும் சிறந்த பதினெண் பீடங்களுள் மூன்று பீடங்களே மிகவும் பிரசித்தம். அவை வடநாட்டிலுள்ள ஜாலந்திர பீடமும் (ஜ்வாலாமுகி), ஒட்யாண பீடமும், (ஜகந்நாதம்), காமராஜ பீடமும் (சத்திய விரத க்ஷேத்திரமென்னும் காஞ்சி) ஆகும்.

இப்பீடங்களை ஹயக்ரீவர், பிருகு முனிவர், வியாச முனிவர் முதலானோர் பூஜித்துப் பேறு பெற்றதைப் புராண—இதிகாசங்கள் விவரிக்கும். இத்தகைய மகிமை பொருந்திய காமராஜ பீடத்தில் ஓங்கார கோணத்தில் பராசக்தி ஸ்ரீ காமாட்சி தேவி பத்மாசனமிட்டு, மோகன வடிவழகுடன் காட்சியளிககிருள்.

மூல சகதி, ஆதி சக்தி, ஆத்ம சக்தியாக விளங்குகிருள் அம்பிகை. சந்திர சூடாமணியாகிய அவள் கிரீடம் ஜொலிக்கிறது. பாசம், அங்குசம், கோதண்டம், பஞ்சபாணம் முதலிய வைகளைத் தம் திருக்கரங்களில் தாங்கிய நிலையில் இரு செவிகளிலும் சூரிய சந்திரர் ஒளி வீசவும், சகல சௌபாக்கியங்களையும் தரவல்ல திருமாங்கல்யம் கண்டத்தில் திகழ்ந்து ஒளிரவும், மணம் பரப்பும் மலர் மாலைகள் அசையும் நிலையில், கருணைக் கடலென அருள் பாலிக்கும் அம்பிகையை நினைத்து கிளி உருவில் தேவர்கள் தவம் செய்கின்றனர்.

ஆவிர்ப்பவம்

அத்தவத்திற்கு மெச்சி மகிழ்ந்தவளாய், அவர்தம் இடையூறுகளைக் களைய பிரளய காலாக்னியாய் ஸ்ரீஅம்பிகை தோன்றுகிருள். அப்போது அவளுக்குப் பதினெட்டு ஆயுதங்களோடு கூடிய பதினெண் புஜங்கள் இருக்கின்றன.

அத்தகு சொரூபத்துடன் 'தூண்' ணெனப் போந்து, பநதகாசூரன் என்னும் அசுரனைக் கொன்று வெற்றி பெருமிதத்துடன் ஐந்து வயதுடைய கன்னிகையாய் பீடத்தின் பிலத்துவாரத்திற்கு மீள்கிருள் தேவி.

அத்தருணம் சூரியோதய காலம். துந்துபி, சங்கம், பேரிகை, படகம், தூகளம், புல்லாங்குழல், தாளம், வீணை, மத்தளம் முதலிய தேவ வாத்தியங்கள் முழங்குகின்றன. அவ்வமயம் வியந்த நிலையில் இருந்த தேவர்கள், அம்பிகையின் விருப்பத்திற்கிசைந்து புனிதம் பொருந்திய காயத்ரி மணடபத்தில் பிரணவத்தை சிங்காசனமாக அமைக்கிருர்கள்.

அப்பீடத்தின் மீது கன்னிகையாகிய அம்பிகையைப்போல பிம்ப பிரதிஷ்டை செய்து, ஷடாதாரங்களில் காணப்படும் ஷட்தரிசன சொரூபிணியாய், நவவரண மத்தியிலிருப்பவளாய் விளங்கும் சக்தியை, 'ஷடாம் நாயம்'' என்கிற மந்திர முறையால் அர்ச்சித்து, பஞ்சோபசாரங்களால் ஆராதித்து, ஸ்ரீ வித்யா மந்திரங்களை ஜபித்து சூரியோதய காலத்தில் கதவைத் திறந்துப் பார்த்தனர்.

சன்னிதி பிரதிஷ்டை

தேவர்கள் அதிசயிக்கும் வண்ணம் பிரதிஷ்டை செய்த பிம்பத்தில் ஸ்ரீ அம்பிகை நிஜரூபத்துடன் ஆவிர்ப்பவித்து காட்சி தருகிருள்! அந்தக் காலம்—சாவித்திரி கல்பம், சுவயம்பு மனுவினுடைய தாமச காலம், கிருத யுக ஆரம்பம்; விஷ்ணு மோகினி உருவம் கொண்ட சமயம். ஸ்ரீமுக

வருஷம்; சூரியன் கும்பத்தில் இருக்கிற பால் குணமென்கிற பங்குனி மாதம்; கிருஷ்ண பக்ஷம், பிரதமை திதி, பூர நக்ஷத்திரத்தின் மத்திய காலம், ஐந்தாம் ஜாமம், சுக்கிர வார உதய காலமாகிய சுப தினமாகும்.

பராசக்தி இக்கோயிலில் மூன்று வித கோலத்துடன் அருள் பாலிக்கிறுள். உலக உயிர்களுக்கு வேண்டிய போக, போக்கியங்களைத் தரவல்ல "ஸ்வர்ண காமாக்ஷி" யாகவும், நல்லொழுக்கம் தவநெறிகளை மனபரிபாகத்தை உயிரினம் பெற "திரிபுராம்பிகை" யாகவும் விளங்குகிறுள் இத்தேவி.

அக்ஷய பாத்திரத்தின் உதவியால் மணிமேகலை அறம் வளர்த்த இந்த க்ஷேத்திரத்தில், அம்பிகையும் ஒரு சமயம், காஞ்சி ஏகாம்பரநாதரிடமிருந்து இரு நாழி நெல் பெற்று, முப்பத்திரண்டு அறங்களை வளர்த்ததாக வரலாறு கூறுகிறது. அதனை

"எண்ணரும் பெருவரங்கள் முன் பெற்றங்கு
எம்பிராட்டி தம் பிரான் மகிழ்ந் தருள
மண்ணின்மேல் வழிபாடு செய்தருளி
மனையறம் பெருக்கும் கருணை யிஞல்,
நண்ணு மன்னுயிர் யாவையும் பல்க
நாடு காதலின் நீடிய வாழ்க்கைப்
புண்ணியத் திருக்காமக்கோட்டத்துப்
பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்"

என்ற பெரியபுராண அடிகளால்நன்கு அறியலாம்.

பராசக்தியின் மகிமை

சக்தி என்ற சொல்லுக்கு ஆற்றல் என்று ஒருவாறு பொருளாகும்; காரணப் பொருள்களில் ஊடுருவி நின்று காரியத்தை இனிது நடத்திக் கொடுக்கும் ஆற்றல் வகையே அது. சக்தியற்ற மனிதன் எதற்கு உதவுவான். கடவுளுக்கும் அப்பராசக்தியே கார்யோன்முகியாய் இருந்து செயலை நடத்துகிறுள்.

இந்த சக்தி என்ற பெண்மையை அல்லது தாயை ஒவ்வொரு மதத்தினரும் தனித் தனிப் பெயர் கொண்டழைக்கிறுர்கள். இந்த சக்தியின் திறமை பலவிதம். வேதமும், "பராஸ்ய சக்திர் விவிதைவச்ரூயதே" என்றது. பிரமத்தின் இந்தச் சக்தியானவள் பலவிதம் என்று இதன் பொருளாகும். "அருளது சக்தியாகும், அரன் தனக்கு அருளை அன்றித் தெருள் சிவம் இல்லை—அந்தச் சிவனன்றிச சக்தி இல்லை" என்று சிவஞான சித்தியிலும் கூறப்பட்டது.

சமஸ்டிரூபமாய் இருக்கும் பராசக்தியின் ஆயிரத்தில் ஒரு கூறே இச்சக்தியாகும். இதே முறையில் ஞான சக்தியும், கிரியா சக்தியும், பராசக்தியில் ஆயிரம் ஆயிரம் பகுதியின் ஒரு கூருக அமைந்தன. உபநிஷத்திலும் பராசக்தியிட்ட ஒரு துரும்பைக்கூட அசைக்க முடியாமல் இந்திரன், அக்னி முதலான தேவர்கள் அவமானப்பட்ட செய்தி விவரிக்கப்படுகிறது.

சாக்த சித்தாந்தத்தில் பரப்பிரம் மத்துடன் உறைந்திருக்கும் இந்த சக்தியை துர்க்கை, சாமுண்டி, சாரதா, காமாக்ஷி, திரிபுரசுந்தரி, ராஜராஜேஸ்வரி என்றெல்லாம் அழைக்கிறுர்கள். இந்தப் பராசக்தியின் திருவிளையாடல்களை ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளுதல் என்ற பஞ்ச கிருத்தியமாகும்.

இந்த சக்தியானவள் அடியார்களைக் காப்பாற்றக் காயும் கனியும் போல் உக்கிர நிலையிலும், அருள் தரும் சாந்தி நிலையிலும் இருப்பாள். இவளது பீஜாக்ஷரம் "ஹ்ரீம்" என்பது. இவள் ஆனந்த மயமானவள். வேதமும்—"ஏதஸ்யைவ ஆந்தஸ்ய அந்யானி பூதானி மாத்ராம் உபஜீவந்தி" என்றது.

இதிகாஸ நூல்களில் சக்தி

பாரதச் சண்டை துவக்கும் முன்பு அர்ச்சுனனே அம்பாளை வழிபட்டான் எனக் கூறுகிறது மகா பாரதம். கண்ணனே, விஷ்ணு மாயையான சக்தியைப் பார்த்து "அம்மா! உன்னை மககள் தூபம், தீபம், நைவேத்யம் முதலியன இட்டு வழிபடுவார்கள். உன்னை துர்க்கை, பத்ரகாளி, விஜயா, வைஷ்ணவி, நாராயணீ—என்றெல்லாம் அழைப்பார்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினர் என்பது பாகவத புராணம். இராமபிரான இலங்கை செல்லும்பொழுது, தேவி பட்டணத்தில் அம்பாளை வழிபட்டார் என்று அத்யாத்ம இராமாயணம் கூறுகிறது.



ஏழிலே உருவாயமைந்துள்ள ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் கோயில்

இவைகளைத் தவிரவும், பழந்தமிழ் நூல்களும், இந்த அம்பாளைப் பாலையின் தெய்வமாக்கி "கான் அமர் செல்வி", "காடுறைக் கடவுள்" என்றெல்லாம் பெயரிட்டு அழைக்கின்றன. பரிபாடலில் வரும் "அம்பா வாடல்" என்ற வருணனை முழுவதும் காத்யாயினியின் வழிபாடே! அகநானூற்றிலும் சிலப்பதிகாரத்திலும் அம்பாள் பெருமை விரிவாகக் கூறப்படுகிறது.

வைகானஸ ஆகமத்தில் திருமால் கோயில்களில், உப தேவதைகளில் சக்தியே பிரதானமாகக் கூறப்பட்டது. பத்தாவது சீக்கியர் குரு மகான் குரு கோவிந்த் சிங்கும் துர்கா தேவியைப்பற்றிய துதி நூலை எழுதினார். அதனைச் சீக்கிய பெரு மக்கள் அதிகாலையில் படிப்பதுண்டு; அவ் வழக்கம் இன்றும் கடைப்பிடிக்கப் படுகிறது.



ஸ்ரீமல்லிகார்ஜுனசுவாமி கோயில் - ஸ்ரீசைலம்.

இந்தப் பராசக்திக்குஆண்டுதோறும் மூன்று நவராத்திரிப் பண்டிகைகள் உண்டு. அன்று பராசக்தி கொலு விருந்து, அடியார்களின் குறைகளை நேரில் கேட்டு அருள் பாலிக்கிறாள் என்பது நம் ஹிந்துக்களின் கருதது ஆகும். காஞ்சி ஜகத்குரு பரமாச்சார்யாள் ஒரு முறை இப்பராசக்தியின் பெருமைகளைப்பற்றி மிக்க உருக்கமாகவும், சுருக்கமாகவும் திருவாய் மலர்ந்தபொழுது—"அம்பிகை பராசக்தி பரமாத்ம ஸ்வரூபம்; நான் மறைகளின் பரமத்தாத்பர்யமும் அவளே" என்றார்.

அந்தப் பராசக்தியே—மதுரையில் மீனாக்ஷியாகவும், காசி (வாரணாசி)யில் விசாலாக்ஷியாகவும், காஞ்சியில் மூல காமாக்ஷியாகவும் தரிசனம் தருகிறாள்.

### காஞ்சியும் காமாக்ஷியும்

காஞ்சி என்றாலே "கலை நிலையம்" என்னலாம். கலை மட்டுமா, எல்லாக் கடவுளும் களி நடம் புரியும் இடம் அது. முக்தி தரும் பழம் புண்ணிய ஸ்தலங்கள் ஏழில் ஒன்று. பூமியே ஒரு பசுவின் வடிவம். அதில் காஞ்சி— இடுப்புப் பகுதி. காஞ்சி என்றால் இடுப்பு என்பதாகும்.

"ஏஷா பூமி: ப்ரம்ம புத்ரீ
சொரூபேண அகிலம் ஜகத்
காஞ்சீ தேச. புரீ காஞ்சீ"!

என்று காமாக்ஷி விலாசம் உரைத்தது. காஞ்சியே ஒரு ஸ்ரீ சக்கரம் என்றால், அந்தச் சக்கரத்தின் நடுவில் உள்ள பிந்து ஸ்தானமே ஸ்ரீ காமாக்ஷியின் ஸன்னிதானம். இங்குள்ள தேவாலயங்கள் எல்லாம் காமாக்ஷியம்மனையே நோக்காக அமைந்திருக்கின்றன.

இங்கு பகவான் ஸ்ரீ வரதன் அத்தகிரி மேல் பக்த பாரிஜாதமாய் சேவை தருகிறாள. குமரக்கோட்டம், காமக்கோட்டம் என்பனவும் உள்ளன. அன்னை காமாக்ஷி காமராஜ பீடத்தில் எழுந்தருளியுள்ளாள். பஞ்சபூதத் தலங்களுள் இது பிருத்வீ (மண்) க்ஷேத்திரமாகும். இங்கு உள்ள சிவாலயங்களில் இதிகாஸ புராண வரலாற்றை ஒட்டி மூலஸ்தானத்தில் அம்மன் கிடையாது.

இந்தப் புண்ணிய ஸ்தலத்தை ஸத்ய விரத க்ஷேத்திரம், பிரம்ம சாலை, துவாதசாந்தீவ முக்தி க்ஷேத்திரம், ஸ்ரீ காமகோடிபுரீ என்றெல்லாம் அழைப்பார்கள். காமாக்ஷி என்ற சொல்லுக்கு பக்தர்களின் விருப்பங்களை எல்லாம் திருக்கண் வட்டத்திலிருந்து சொரிபவள் எனப் பொருள்; வேறு பொருள்களும் உண்டு.

### சரித்திரச் சான்றுகள

கரிகாலன் என்னும் திருமாவளவன் செரு படையுடன் இமயம் செல்ல நேர்கிறது. இடையில் ஒரு வேடன் மூலம் காஞ்சியின் பெருமையைக் கேட்டுப் பூரித்துப்போகிறான். பின் காஞ்சியைத் தனதாக்கி, நான்கு காத தூரமுள்ள சுற்றெல்லையுடைய எழில் நகராக்கி, குன்றனைய மதில்களை நன்கு எழுப்பி, அதில் பலவகைப்பட்ட மக்களையும் குடியேற்றுகிறான். அதன் பின்னர், சாத்தன் அருளால் காஞ்சியில் செண்டு பெறற கரிகாலன், இமயத்தை வென்று செண்டால் அடித்துப் புலிக்கொடி பொறிக்கிறான் என்

பது செய்தி. கரிகாலன் கி. மு. 60 முதல் கி. மு. 10க்குட்பட்ட காலம் என ஆராய்ச்சி வல்லுனர் கூறுவர்.

இதனை,

" கச்சி வளைக் கைச்சி
காமக் கோட்டங்காவல்
மெச்சி இனிதிருக்கு மெய்ச
சாத்தன் -- கைச்செண்டு
கம்பக் களிற்றுக் கரிகாற்
பெருவளத்தான்
செம்பொற் கிரி திரித்த செண்டு"

என்ற சிலப்பதிகாரம்—இந்திரவிழா ஊரடுத்த காதை உரை மேற்கோள் செய்யுளால் நன்கறியலாம்.

ஹரிஹரன் என்ற விஜய நகர மன்னன் (கி. பி. 1392) காலத்தில்—சாலிவாகன சகம் 1315-ல, இக்கோயிலின் கர்ப்பக்ரஹ விமானத்துக்கு தங்கத் தகடு வேய்ந்து கும்பாபிஷேகம் நடைபெற்றதாக தொல்பொருள் இலாகாவினர் சேகரித்துள்ள கல வெட்டுக் களினின்று தெரிய வருகிறது. தவிர, அசசுத தேவராயர் என்ற விஜய நகர மன்னர் (கி. பி. 1554) காலத்திய கல் வெட்டுக்களும் இங்குக் காணக் கிடக்கின்றன. அவை மூலம் கோயிலுக்கென்று கிராம தானங்கள் விடப் பட்ட செய்திகளை அறியலாம். மற்றும், சோழர் காலக் கல் வெட்டுக் களும் உள்ளன.

நந்திவர்மன், சம்புராயர் முதலிய மன்னர்களின் காலக் கல் வெட்டுக் களும் இக்கோயிலின் பழஞ்செய்தி களை மிக விரிவாகக் கூறுகின்றன.

ஆதியில் இக்கோயிலில் தாந்திரீ கர்கள் இருந்ததாகத் தெரிய வரு கிறது. அத்வைத மதத்தை பாரதத் தின்பல இடங்களிலும் பரப்பிய ஆதி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள் பிற மதத்தவர்களை வாதில் வென்று காஞ்சியை அடைந்து—சர்வக்ஞ பீடம் ஏறி காமகோடி பீடத்தை ஸ்தாபித் தார். இக்கோயிலில் "அஷ்டலக்ஷ்மி கள்" கொண்ட யந்திரத்தை பிர திஷ்டை செய்தார். இப்போது நிகழும் பூஜையாவும் அதற்குத்தான்; காஞ்சிக் காமாட்சி அம்மனுக்கு அல்ல! காஞ்சிக் கோயில்கள் அனைத்தும் காமாக்ஷியம்மன்கோயில் திசையையே நோக்கி இருப்பதுடன், பிற கோயில் உற்சவ மூர்த்திகள் எல்லாம் காமாக்ஷியம்மன் கோயிலை வலம் வரு தல் அதன முக்கிய சிறப்பை மேலும் புலப்படுத்துவதாகும்.

ஸ்ரீ லக்ஷ்மி சுய உருவம் பெற்ற தும், ஹயக்ரீவர் விஷ்ணு முகம் பெற்றதும், பூர்வம் எட்டாவதான மனுசசக்ரவர்த்தி சகலகலா ஞானம் பெற்றதும், தசரதர் பிள்ளைப்பேறு பெற்றதும், கணபதிதுணை பீரமகாராஜ ருகித் துதிக்கப் பெற்றதும், காந தாரன், உருத்திரன் முதலியோர் துதிக்கப் பெற்றதுமான இப்புனிதத் தலத்தில், ஆதிசேஷன், துர்வாஸர், சரஸ்வதி, அன்னபூரணி, கள்ளர் பெருமாள் (திருமங்கையாழ்வாரின் மங்களாசாஸனம பெற்றது) சாஸ்தா, மகிஷாசுரமர்த்தினி, காலபைரவர் ஆகியோரைத் தரிசித்துவிட்டுத் தூய உளளத்துடனும் தெய்வீக உணர் வுடனும் திரும்புவோமாக!



**தெரிந்து கொள்ளுங்கள்**

## விடுதலை

பிறவித்தளையிலிருந்து விடுபட மனிதன் நான்கு வழிகளில் எதை வேணடுமானாலும் பின்பறறலாம். அவை :

1. கர்மயோகம் — பற்றற்ற செயல்வழி
2. பக்தியோகம் — ஒருமுகப்பட்ட ஆராதனைவழி
3. ராஜயோகம் — எல்லாவற்றிலும் இறைவனைககாணுதல்
4. ஞானயோகம் — உயர்ந்த அறிவு வழி.

## எட்டு வகைச் செல்வங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. அரசு | 2. மக்கள் | 3. சுற்றம | 4. பொன் |
| 5. மணி | 6. நெல் | 7. வாகனம் | 8. வேலையாட்கள் |

## முக்தி ஸ்தலங்கள் - 16

1. ஸ்ரீரங்கம் 2. அஸதிகிரி (காஞ்சீபுரம்) 3. அஞ்சனகிரிம் 4. தார்க்ஷயாத்திரி 5. சிம்மாசலம் 6. ஸ்ரீகூர்மம 7. புருஷோத்தமம் 8. வதரி நாராயணம் 9. நைமிசம் 10. துவாரகா 11. பிரையாகா 12. மதுரா 13. அயாத்தியா 14. கயா 15. புஷ்கரம் 16. சாள க்ராமம். இவைகள இராமாநுஜருககு மிகவும் உகநத ஸதலங்கள் என்று பெரியோர் சொல்வா.

## பயனற்றவை

| | | |
|---|---|---|
| ஓரெட்டில எட்டாத இளமையும் | — | 8 |
| ஈரெட்டில் எட்டாத கல்வியும | — | 16 |
| மூவெட்டில் எட்டாத மணமும் | — | 24 |
| நாலெட்டில் எட்டாத மககளும் | — | 32 |
| ஐயெட்டில் எட்டாத செல்வமும் | — | 40 |
| ஆறெட்டில் எட்டாத கீர்த்தியும் | — | 48 |
| ஏழெட்டில் எட்டாத தவமும் | — | 56 |
| எட்டெட்டில் எட்டாத சாவும் | — | 64 |

பயனில்லைகாண

—தகவல்: அடியார்க்கடியவன்-கேதாண்டபட்டி.

# ஜடாயு

இந்த உலகம் அழியுமா? அழியும் எனறால எப்போது? இப்படிச் சிலர் கேளவிகளை எழுப்புகிறார்கள். உலகம் ஒரு குறிப்பிட்ட நாளில் அழியப் போகிறது என்று சில ஆண்டுகளுக்கு முன, சிலர் கணித்தார்கள். அநத நாளில் 'நாம் மட்டும் தப்பி விட லாம்' எனறு நினைத்து அவர்கள் ஒரு மலைமீது ஏறி நின்றுகொண்டார் களாம். இபபடிப் பத்திரிகைகளில செய்தி வநதது. அவர்களை இப்போது நினைத்தாலும் நமக்குச் சிரிப்புத்தான் வருகிறது. மலைமீது நின்றுகொண டால் மட்டும் உலக அழிவிலிருநது தப்பிவிட முடியுமா? உலகத்தில் மலை யும் ஒரு பகுதி அல்லவா? உலகம அழியுமபோது மலையும் சேர்ந்து தானே அழியும்? சரி, அனறைய தினம் உலகம் அழிந்ததா? இல்லையே!

உலகம் ஏன் அழியவிலலை? பல ஆயிரம ஆணடுகளாக உலகம் அழி யாமல் இருப்பதற்கு என்ன காரணம்? யாராவது சிந்தித்துப் பார்த்தார் களா? இரணடாயிரம் ஆணடுகளுககு முன் தமிழ்நாட்டில் ஒருவா சிந் தித்துப் பார்த்தார் இதனை. இவா ஒரு அரசர். கடலுள் மாய்ந்த பாண் டியன் இளம்வழுதி என்பது இவரது பெயர். ஆட்சித் திறத்தோடு அறிவுத் திறமும் மிக்கவர் இவர். நாட்டு மக்களின் நன்மைக்காகச் சட்டங்களை மட்டுமல்ல, பாடலையும் இயற்றியவர் இவர். இந்த உலகத் தில் இன்னும் சில நல்லவர்கள் இருக் கிறார்கள். அவர்கள் இருக்கும்வரை உலகம் அழியாது. 'நல்லவர் ஒரு வருக்காக எல்லாருக்கும் மழை பெய் கிறது' என்றார் வள்ளுவப் பெருந் தகை. அதுபோல, நல்லவர் சிலரா வது வாழ்வதனால்தான இந்த உலகம் இன்னும் அழியாமல நிலைத்து நிற் கிறது என்கிறார் இளம்பெருவழுதி.

புகழ்தரக கூடிய செயலகளுக்குத் தம் உயிரையும் தியாகம் செய்பவர் கள்-உலகமே கிடைப்பதாக இருந் தாலும் பழிதரும் செயலைச் செய்யா தவர்கள்-தமக்காக வாழாமல் மற்ற வர்களுக்காகவே வாழ்பவர்கள்-ஆகிய நல்லவாகள் இருப்பதனால்தான் இந்த உலகம் அழியாமல் இன்னும நிலைத்து நிற்கிறது என்கிறார் அவர்.

புகழெனின் உயிரும் கொடுக்குவர்;
பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்;
அன்ன மாட்சி அனையராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநா
உண்மையானே.........
உண்டால் அமம இவ்வுலகம்

என அவர் இசைக்கும் பாடல், புற நானூறு என்னும் சஙகத தமிழ் இலக் கியத்தில் (பா-182) இடம் பெற் றுள்ளது

புகழுக்காக உயிரைக் கொடுக்கும் புண்ணியர்கள் இருக்கிறார்களா? இருக் கிறார்கள். ஆனால் அவர்கள் புகழ் கிடைக்கும் என்று உயிரைக் கொடுப் பதில்லை. தமக்கென வாழாமல் மற்ற வர்களுக்காக வாழும்போது தம் உயிரை இழக்கிறார்கள். அதனால், புகழ் அவரைத் தேடி அடைகிறது.

**புலவர். பெ. கிருஷ்ணராஜன்,** M.A., B.Ed.,
*சேலம்-6.*

இந்திய நாடு அந்நியரிடம் சிக்கி அடிமைப்பட்டுச் சீரழிந்து கொண் டிருந்தது. அப்போது நாட்டு மக் களின் உரிமைக்காக மகாத்மா காந்தி யடிகள் போராடினார். அவர் தம் சுக போகங்களைத் துறந்தார். தடி யடியும் சிறைவாழ்வும் பெற்றுப் பல துன்பங்களுக்கு ஆளானார். நாடு விடுதலை அடைந்த பிறகும் மக்களின் நன்மைகளைப் பற்றியே சிந்தித்தார். அப்போது தீயவன் ஒருவனது துப் பாக்கிக் குண்டுகளுக்குத் தம் உயிரை ஈந்து புகழுடன் பெற்றார். மகாத்மா காந்தியடிகளைப் போலப் புகழுடம்பு பெற்ற பறவை ஜடாயு. சீதா தேவியை அரக்கன் இராவணனிட மிருந்து மீட்பதற்காகப் போராடி உயிர் நீத்துப் புகழ் கொண்ட ஜடாயு வின் பெருமையை இராமகாதை பாராட்டும். சாதாரண மனிதரைக் காட்டிலும் உயர்குணம் கொண்ட ஜடாயுவை, உயர்திணையாகவே மதித்து எல்லா மொழி இராமாயண நூல்களும் போற்றுகினறன.

சூரிய தேவனின் தேர்ச்சாரதி அருணன. அவனுக்கு இரண்டு மக்கள் அவர்கள் சம்பாதி, ஜடாயு என்பவர் கள். கழுகு உருவமுடைய இவர்கள் கழுகு இனங்களுககு அரசர்களாகி ஆட்சி செய்து வந்தார்கள். இவர் கள் தேவர் உலகைக் காண ஆசைப் பட்டு, ஒரு நாள் வானில் மிக உயரப் பறந்தார்கள். சூரியனது தேரின் அருகில் சென்றபோது ஜடாயு, சூரிய வெப்பத்தினால் வெதும்பிக் கதறினார். அப்போது சம்பாதி, ஜடாயுவுக்கு மேலாகப் பறந்து தன் சிறகுகளின் நிழலால் தம்பியை மறைத்துக் காத் தான். இதனால் சம்பாதியின் சிறகு கள் முற்றிலும் எரிந்து உடல் வெந்து உயிர் நீங்காமல் சாரங்கமுனிவர் வசித்த மகேந்திர மலைச்சாரலில் மூர்ச்சித்து விழுந்துவிட்டான். அண்ணனுக்கு ஏற்பட்ட நிலைகண்டு ஜடாயு உயிர்விடத் துணிந்தார். சம் பாதி ஜடாயுவைத் தேற்றி, 'நான் வலிமை இல்லாமல் இருக்கிறேன். நீயும் இறந்துவிட்டால் கழுகு இனங் கள் அரசனில்லாமல் வருந்த நேரிடும். ஆகவே நீ போய் அரச காரியத்தைக் கவனி'' என்று கூறி ஜடாயுவை அனுப்பி வைததான். ஜடாயு தண் டகவனத்தில் இருந்து வந்தார்.

மகேந்திர மலைச் சாரலில் அசை வதற்குக் கூட முடியாமல் இருந்த சம்பாதி, பின் ஒரு காலத்தில் இராம நாமத்தைக் கேட்ட அளவில் சிறகு கள் வளரப் பெற்று, முன்போல் பறக்கும் வலிமை பெற்றான்.

# நவகிரக துதிமாலை

**சூரியன் :** ஞாலமேழும் வாழவைக்கும் உயர்ஞாயிறே, போற்றி!
சீலமொடு ஞானமும் அருளகின்ற செஞ்சுடரே போற்றி!
காலமெனும் வீதியினில் ஏற்றிய எரிசுடரே போற்றி!
கோலமிகு வைகறையில் குலங்காபபாய், போறறி, போற்றி!

**சந்திரன் :** பாருலகில் மணிவிளக்கே, வளர்மதியே, குளிர்நிலவேபோற்றி!
பாரோரின் சீர்மதியை ஆள்கினற எழில்நிலவே, போறறி!
தாவன்யம் தன்மையொடு நின்புகழே வெண்மதியே போற்றி!
தாரணியின தவமணியே, புகழ்தருவாய் போற்றி, போற்றி!

**செவ்வாய் :** பூமிதன்னின் புத்திரனாய் புகழ்பரப்பும் செவ்வாய் போற்றி!
பூவுலக மானிடரின் பதவிநிலம் அருள்கினற தேவா போற்றி!
மேவுபுகழ்ச் செங்கோளே, செவ்வேளே! வேலா போற்றி!
தேவுதிகழ் அங்காரகா, நின் திருவடி போற்றி! போற்றி!

**ராகு :** நிழல்கோளாய் இடம் வலமாய் வருகின்ற கொடும்பாம்பே போற்றி!
தழல்நெருப்பே, மானவரின் விடக்கோனே, ராகுவேபோற்றி!
சுழல்வாழ்வில் இருள்தவிர்க்க இரங்கிடுவாய் எம்தேவே போற்றி!
உழல்கின்றேன் அருள்புரிவாய், தயவுடனே போற்றிபோறறி!

**குரு :** கோளனைத்தும் பணிகின்ற பெருங்கோவே,சுரகுருவேபோற்றி
கோருகின்ற பொருள், செல்வம்பேறுபெற அருள்தேவே போற்றி!
போகங்கள் பெருகிடவே, தோஷங்கள் நீங்கட்டும் குருவே
சோகங்கள் விலக்கிடவே விரைந்திடுவே போற்றி? போற்றி!

**சனி :** புதிர்நிறைந்த மந்தகதிப்பெருங்கோளே! சனிதேவாபோற்றி!
பூவுலகோர் பாவங்கள் நின்மாட்சி, கருந்தேவா போற்றி!
பெருந்துன்பம், பிணிநோய்கள் மாற்றிடுவாய்நின்னடிபோற்றி
பேதைமையோடு, துயர்வறுமை தீர்த்திடுவாய் போற்றி! போற்றி!

**புதன் :** தினகரனின துரிதகதித் துணைகோளே, புததேவா, போற்றி!
மானவரின அறிவுகூர்மை, நின்பலத்தால் புத்திதேவா,
வானவரின் அருளாசி, கீர்த்தி, புகழ் புதபகவான் போற்றி!
தானஙகள், தருமங்கள் நல்கிடுக போற்றி! போற்றி!

**கேது :** நிழல்கோளின் இணைகோளே! கொடும்பாம்பே, கேதுவே போற்றி!
அழல் உமிழும் விடக்கோளே,ஞானமருள் தெய்வமேபோற்றி!
கழலிணைகள் சரணடைந்தேன் இரங்கிடுவாய் போற்றி!
கவலைகள் தீரவேண்டும. உன் அருளால் போற்றி! போற்றி!

**சுக்ரன் :** செங்கதிரோனின் சேவகனே! சுடர்மிகு கோனே சுக்ரனே போற்றி!
சங்கடங்கள் தொலைத்துப் பொருள் அருள்வாய் போற்றி!
மங்களமாய் வாழவேண்டும், ஒளிர்வெள்ளிக்கோமானே போற்றி!
எங்களுடைய பேறுகளே உன் கருணையே, போற்றி! போற்றி!

பூரம் - சென்னை - 5.

அயோத்தி அரசன் தசரதன் ஒரு சமயம் வேட்டைக்காகத் தண்டக வனம் சென்றான். நீண்ட தொலைவு வந்ததால் களைத்துப்போன தசரதன் தனது சேனைகளைத் தொலைவில நிறுத்திவிட்டுத் தான் மட்டும் ஒரு மரத்தினடியில் படுத்து உறங்கினான். அந்த மரத்தடியில் பாம்புப் புற்று ஒன்று இருந்தது. நித்திரை மயக்கத்தில் தசரதன் அநதப் புற்றை உதைத்து விட்டான் புற்று உடைபட்டு அதிலிருநது பாம்பு ஒன்று வெளிப்பட்டது. அது தசரதனைக் கடிக்க வந்தது. இவை அனைத்தையும ஒரு மரத்தின மீதிருந்து பார்த்துக் கொண்டிருந்த ஜடாயு, திடீரென்று பறந்து வந்து நாகத்தைத் தன் அலகால் கொத்திக் கொன்றார். அப்போது தூக்கம் கலைந்து எழுந்தான் தசரதன். நடந்தவை அனைத்தையும் ஜடாயு கூறினார். தசரதன் மகிழ்ச்சி அடைந்து, "என் உயிரைக் காத்த நீ இன்று முதல் எனக்குச் சகோதரன்" என்று ஜடாயுவைத் தழுவிக் கொண்டான். அதற்குப் பிறகு இருவரும் பிரிந்தார்கள்.

நெடு நாட்களுக்குப் பின், கைகேயியின வரத்தினால் இராமன காட்டிற்குச் சென்றான். அவனுடன் சீதையும இலட்சுமணனும் சென்றனர். அவர்கள் தண்டகவனத்தில் பத்து ஆண்டுகள் வாழ்ந்தார்கள். அதன் பிறகு அகத்திய முனிவரின் கட்டளைப்படி பஞ்ச வடிக்குப் புறப்பட்டார்கள். சிறிது தொலைவில் ஜடாயு அவர்களைப் பார்த்தார். அவர்கள் தசரத குமாரர்கள் என அறிந்து 'தசரதர் நலமா?' என விசாரித்தார். தசரதன் புகழுடம்பு பெற்றான் என்பதைக் கேள்விப்பட்டவுடன் ஜடாயு பதை பதைத்துக் கீழே விழுந்து மயக்கமடைந்தார் இராம லட்சுமணர் செய்த உதவியால் ஜடாயு மயக்கம் தெளிந்து, 'பிள்ளைகளே! நானும் தசரதனும் உடல் இரண்டு உயிர் ஒன்று என இருந்தோம். எனவே அவர் பிரிந்தபின் நான் உயிர் வாழ்

வது தகுதி அல்ல. நான் நெருப்பில் புகுந்து உயிர் துறந்து விடுகிறேன்.

உடல இரண்டுக்கு உயிர் ஒன்றுஞன
பிரியவுமதான பிரியாதே இனி
திருககும்
உடற் பொறையாம பிழை பாராது
எரியதனில் இனறே புக்கு இறவேனேல்
இத்துயரம் மறவேன்.

(கம்பராமாயணம்)

நீங்களே என் மக்கள். ஆதலின் எனக்கு ஈமக் கடன்களை நீங்களே செய்து விடுங்கள்' என்று கூறி நெருப்புமூட்டத் தொடங்கினர். இராமனும் லட்சுமணனும், 'நாங்கள் தந்தையை இழந்தோம்; உங்களையும் இழந்துவிட்டால் நாங்கள் வாழ்வது எப்படி?' என்றுகூறி ஜடாயுவின் முயற்சியைத் தடுத்து அவரைத் தேற்றினர்கள். அதன் பிறகு அவா கள் பஞ்சவடி செலலும் வரையிலும் அவர்களின்மீது வெயில் படாதவாறு ஜடாயு தன் இறக்கைகளை விரித்து நிழல் பரப்பிச் சென்ருர். பஞ்சவடி யில் அவர்களை விட்டுவிட்டு ஜடாயு தன் இருப்பிடத்தை அடைந்தார்.

இராமன் இலட்சுமணன் சீதை ஆகிய மூவரும் பஞ்சவடியில் வசித்து வந்தனர். ஒரு நாள் மாரீசன் என் னும் மாயமான் காரணமாக இராம லட்சுமணர் சீதையைப் பிரிந்து சென றனர். அச்சமயம் இராவணன் சீதையை வஞ்சகமாகக் கவர்ந்து ஆகாய வழியே பறந்து சென்றுன். அதனைப் பார்த்த ஜடாயு இராவண னுக்கு அருகில் பறந்து சென்று சீதையை விட்டுவிடும்படி அறிவுரை கூறினர். மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா அல்லவா?' ஜடாயு வின் புத்திமதி செவிடன் காதில் ஊதிய சங்கு ஆயிற்று.

அதனல் ஜடாயு இராவணனுடன் மோதினர். இராவணனின முடிகள் பத்தையும் கீழே தள்ளினர். அவனு டைய தேரின்மீது கட்டியிருந்த வீணைக் கொடியைத் தன் அலகினல் கிழித்து எறிந்தார். இராவணனது வில்லைத் துண்டித்து, அம்பருத் தூணி யைப் பறித்து எறிந்தார். இராவண னுடைய தேர்க் குதிரைகளைக் கொனறு தேரையும உடைத்தெறிந தார். தேர்ப்பாகனது தலையைக் கிள்ளி இராவணனது முகத்தின்மீது வீசி எறிந்தார். இவற்றல் இராவ ணன் கடுஞ்சினம் கொண்டு சிவபெரு மான தந்த தெய்வ வாளெடுத்து ஜடாயுவின் சிறகுகளை அறுத்துவிட் டான். மலை ஒன்று விழுந்ததுபோல, ஜடாயு நிலத்தின்மீது சாய்ந்தார். இதுதான் தகக சமயம என்று இராவணன சீதையை மண்ணேடு சேர்த்தெடுத்துத் தன் தோளின்மீது வைத்துக் கொண்டு ஆகாய வழியே சென்றுவிட்டான.

இராமனும் இலட்சுமணனும் பர்ண சாலையில் சீதையைக் காணு மல் திகைத்தனர். அவளைத் தேடிப் புறப்பட்டனர். வழியில் வீணையின உருவம் எழுதப்பட்ட கொடி அறுந்து கிடப்பதைப் பார்த்தனர்; ஒருதேரின் சிதைந்த பாகங்களோடு, தேர்க் குதிரைகளும் தேர்பபாகனும் இறந்து கிடப்பதைக் கண்டனர்; சீதையின் அணிகலனகள் சிதறிக் கிடப்பதைப் பார்த்தனர்; சீதையை மீட்பதற்காக ஜடாயு போரிட்டிருக்கலாம் எனறு அவர்கள் நினைத்தனர்; மேலும் சிறிது தூரம் சென்றபோது சிறகுகள அறு பட்டு நிலத்தில் வீழ்ந்து கிடநத ஜடாயுவைக் கண்டனர். ஜடாயுவின நிலையைப் பார்த்துத் துக்கம் தாங் காமல் இராமன் மூர்ச்சை அடைந் தான். இலட்சுமணன் சிறிது நீர் கொணடு வந்து அண்ணனின் முகத தில் தெளித்தான். மயககம நீங்கிய இராமன் ஜடாயுவைப பார்த்துப் பலவாறு புலம்பினன். இலட்சுமண னும் அழத்தொடங்கிவிட்டான்.

இவர்களுடைய அழுகைக் குரலைக் கேட்ட ஜடாயு, சிறிதே கண விழித்துப் பார்த்தார். இராமனையும் இலட்சுமணனையும் கண்டு, 'புண்ணிய சீலர்களே! இறக்கும் சமயத்தில உங் களைத் தரிசிக்கப் பெற்ற நான புண் ணியம் செய்தவன் ஆவேன். இராவ ணன் என்னும் அரக்கன் சீதையைக் கவர்ந்து சென்றுன். அவன் அவளைத் தொடுவதற்கு அஞ்சி மண்ணேடு பெயர்த்து எடுத்துச் சென்றுன். அதனல் சீதைக்கு எத்தகைய இழி வும் நேராது. அவளை மீட்பதற்காக நடந்த போரில் நான் இந்நிலை அடைந் தேன். நீங்கள் அரக்கனை அழித்து நலமாக வாழ்வீர்களாக!' என்று வாழ்த்தினர். அப்போது ஜடாயுவின் உயிர் பிரிநதது. இராமனது தரி சனத்தால் ஜடாயு மேலான பதம் அடைந்துவிட்டார்.

ஆண்டாண்டு அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ? அதனல் இராமனும் இலட்சுமணனும் ஒரு வாறு மனம் தேறுதல் அடைந்தனர். இராமன் ஜடாயுவுக்குப் பிள்ளை போலிருந்து அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான்.

பறவைகளில், மயில் தோகை விரித் தாடிக் கண்ணுக்கு இன்பமளிக்கிறது. குயில் இன்னிசைக் குரலெழுப்பிச் செவிக்கு இன்பமூட்டி மனத்தை மகிழ்விக்கிறது. கோழி, காலையில் கூவி நம்மைத் யிலெழுப்புகிறது. காகம் கூட்டு வாழ்க்கையை உணர்த்துகிறது. அனனம் நீரைப் பிரித்துப் பாலை மட்டும் பருகுகிறது. அன்றில் துணையைப் பிரிந்தால் உயிரைத் துறக்கிறது. இன்னிசைக்கு மயங்கும் அசுணமா, கொடூர ஒலி யைக் கேட்கும்போது உயிரை விடு கிறது. இவ்வாறு ஒவ்வொரு பறவைக்கும் ஒரு சிறப்பு இருக்கிறது. ஆனல் எந்த வகையிலும் குறிப்பிடத் தக்க சிறப்பு கழுகு எனும் பறவை இனத்திற்கு இல்லை. இந்தப் பழி யைத் துடைக்கும் வகையில் கழுகு அரசர் ஜடாயு சீதாபிராட்டியைக காப்பாறற முயறசி செய்து நடந்த போரில் தம் உயிரைத் தந்து இராமா யணத்தில நிலையான இடத்தைப் பெறறுவிட்டார்.

தன உயிர் புகழ்க்கு விற்ற நாயகன்

என்று கம்பர் ஜடாயுவைப் பாராட்டு கிறுர் மனிதர்களில் மட்டுமல்ல, பிற உயிரினஙகளிலும் ஜடாயுவைப் போலத 'தமக்கென வாழாமல் மற்ற வர்களுக்காக வாழ்பவர்கள்' இருப் பதனல்தான் இந்த உலகம் இன்னும் அழியாமல் நிலைத்து நிற்கிறது. ★

# அக்காரத் தீங்கனி

திரு. வ. ஜோதி எம்,ஏ.,
புதுப்பேட்டை

பெருமானை மனதில் எண்ணி ஆத்மானுபவத்தில் திளைத்த ஆழ்வார்கள், தங்கள் அனுபவத்தை அப்படியே எழுதிப் போந்தார்கள். பெருமானின் இயல்புகளை நமக்குச் சுட்டிக் காட்டும் முகத்தான் அரிய சொற்றொடர்களை நமக்கு விட்டுச் சென்றுள்ளார்கள். அத்தகைய அருமையான சொற்களில் ஒன்றுதான் 'அக்காரம்'. எண்ணிப் பார்க்கும் தோறும் அரிய பெரிய கருத்துகளை நமக்கு வழங்கும் இனிய சொல் 'அக்காரம்'.

'அக்காரம்' என்ற சொல்லிற்குச் சர்க்கரை, இனிப்பு, கரும்பு என்றெல்லாம் பொருள் உண்டென்றாலும் அதனினும் அரிய சொல்லாழம் உள்ளதென்று எண்ணுகின்ற அளவிற்குத் தம்முடையபாடல்களில் அச்சொல்லை ஆன்றோர் கையாண்டுள்ளனர்.

அடியவர்கள் உள்ளத்தில் இனிப்பாக இருப்பவன் என்றும், உவப்பாய் உறைபவன் என்றும் ஆன்றோர்கள் ஆண்டவனைக் கூறுவர் அத்துடன் மட்டுமின்றி இறைவனை பழம்—என்றும், சுவை என்றும், கனி என்றும், கரும்பு என்றும் பல பக்தி நூல்கள் பேசுகின்றன. 'அருள் பழுத்த செழுங்கனியே, அகம் பழுத்த சிவ ஞான அமுதே' என்றும், 'கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே, தரு நிழலே, நிழல் கனிந்த கனியே' என்றும், 'சுவைக் கட்டியினும் இனித்திடும் கரும்பே' என்றும் இன்னும் பலபடியாகவும் இராமலிங்க அடிகள் பேசுவார்.

தேவாரம், திருவாசகம் போன்ற நூல்களில் கரும்பின் சுவையோடு வைத்து இறைவனின் இயல்பு பேசப்படுவதைக் காணலாம். திவ்வியப் பிரபந்தம் 'அருமா கடலமுதே' (16'6), 'கன்னலை கரும்பினிடைத் தேறலை' (1639) என்றெல்லாம இறைவனைப் பற்றிக் கூறும்.

இப்படி இனிப்போடு சம்பந்தப் படுத்தி இறைவனின் பெருமையைப் பேசுகின்றவர் பலர் திருமங்கை ஆழ்வார் தம் பாசுரத்தில், திருக் கடிகையில் அமர்ந்துள்ள பெருமானை 'அக்காரக்கனி' - என்றே அன்புருக அழைக்கின்றார்.

"மிக்கானை, மறையாய் விரிந்த
விளக்கை, என்னுள்
புக்கானை புகழ்சேர் பொலிகின்ற
பொன்மலையை
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின்
மிசைஇருந்த
அக்காரக் கனியை அடைந்துய்ந்து
போனேனே."

(பெரிய திருமொழி 8-9-4 (1731) என்று 'தக்கானை, கடிகைத் தடங் குன்றின் மிசை இருந்த அக்காரக் கனியை அடைந்துய்ந்து போனேனே' என்று பாடி பெருமானையே 'அக்காரக் கனி' என்று அழைக்கின்றார் ஆழ்வார்.

எம்பெருமான் கடிகை போன்ற திருத்தலங்களில் 'அக்காரக் கனி'யாய் எழுந்தருளக் காரணம் யாது? பக்தி பழுத்த அடியார்களுக்காக எம்பெருமான் இவ்வாறு அக்காரக்கனியாய் எழுந்தருளியுள்ளான். பக்தியில் பழுத்த அடியார்களின் பிறவி என்னும் பவம் அறுக்கக் காரணமாய் இருப்பவன் இறைவன்.

இக்காரணம் பற்றியே திருமழிசைப் பிரான் இறைவனை 'பக்தியுழவன்' என்று பாடுகின்றார். பக்தியாய் பூசிப்பவர் உள்ளங்களில் நின்று, அவனிடத்தில் உள்ள காமம், குரோதம் போன்ற தீக்கனிகளைத் தீய்த்து, பிறப்பு அறுக்கக் காரணம் ஆகிறான்.

அதாவது அவன் தித்திக்கும் தீங்கனியாய் மட்டும் இல்லாமல், பிறவி என்னும் தீக்கனியை அழிக்கின்ற வனாகவும் உள்ளானும். இக்கருத்தை



ஸ்ரீ வேணுகோபால சுவாமி - கார்வேட்டிநகர்.



**ஆண்டாள் திருக்கோலத்தில் ஸ்ரீராஜகோபாலன்.**

மிக அருமையாக அமைத்துப் பாடுகின்ருர் கண்ணபுரக்கலம்பக ஆசிரியர்.

‘ தித்திக்கும் அக்காரத் தீங்கனியாம்
சௌரிசன்
பகதி பழுத்தாா பவம கைக்கும்—
பித்தன
உவர்ககடல வண்ணன புளிஙகுடி
யோங்கும
துவர்க்கும் அதரத்தான் தோய்வு’

(கணணபுரக்கலம்பகம்-57)

இப்பாடலில் இறைவன் அக்காரத் தீங்கனியாய் இருக்கிருன என்பது மட்டுமின்றி பக்தி பழுத்தார் பவம் கைக்கும பித்தனுகவும் இருக்கிருனும்.

அது மட்டுமா?

பக்தியாகிய கனியை நம் உள்ளத்தில் பழுக்க வைப்பதற்கே அக்காரத் தீங்கனியாய் உள்ளானும். பக்தியாகிய பழம் பழுத்த பின்னர் நம் பிறவி என்னும் தீக்கனியை நசிய வைப்பதற்காக எப்போதும் பித்தனுக அலேகின்ருனும். அதனுல்தான் இரண்டாம் அடியில் ‘பக்தி பழுத்தார் பவம் கைக்கும் பித்தன்’ என்கிருர் ஆசிரியர்.



**திருமலேத் திருக்கோயில்.**

கனியாக ுனிக்கின்ற இறைவன் நம் பிறவிக் கெடவும் காரணமாய் இருப்பதால் அக்காரத் தீங்கனி என்ற சொல்லேக் கலம்பக ஆசிரியர் கையாள்வது போன்று, திருவாசகத்திலும் மாணிக்கவாசகர் இனிக்கின்ற இறைவனே, வாழ்வு அற வாழ்விக்க வந்தவன் என்கிருர். இக்கருத்து திருவாசகத்தில் பிடித்த பத்து என்ற பகுதியின் முதற்பாடலில் காணப்படுகிறது.

‘ உம்பர்கட் கரசே' ஒழிவற நிறைந்த
யோகமே! ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு
தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே!’

(திருவாசகம்)

‘ஊற்றையேன் தனக்கு வம்பெனப் பழுத்த இறைவன் அவருடைய வாழ்வு அற வாழ்வித்த மருந்து’

என்று வீட்டுலகம் பற்றிப் பேசுகின்ருர். எனவே இறைவன் தீங்கனியாய் உள்ளத்தில் தித்திப்பவனுய் மட்டுமின்றி, பக்தியில் முதிந்தவர்களின் பிறவி என்னும் தீககனியையச சிதைப்பவனுகவும இருக்கின்ருன் என்பதையே 'அக்காரத் தீங்கனி' என்ற சொற்ருெடர் சுட்டிக் காட்டுகினறது.

தித்திக்கும் அக்காரத் தீங்கனி என்ற பாடலின மூலம் இன்ஞெரு சிறப்பையும் ஆசிரியர் நமக்குச் சுட்டிக் காட்டுகின்ருர். இறைவன் அறுசுவைக்கும் மூலகாரணனுய் இருக்கிருன் என்பார். இப்பாடலில் அவர் தித்திப்பு (இனிப்பு) அக்காரம் (காரம்) பவம் கைக்கும் (கசப்பு) உவர்க்கடல் வண்ணன் (உப்பு) புளிங குடி ஓங்கும் (புளிப்பு) துவர்க்கும் அதரத்தான் (துவர்ப்பு) என்று அறு சுவையையும் அமைத்து 'ஷட்ரசம்'- என்ற தலைப்பில் அற்புதமாய்ப் பாடுகின்ருர். எனவே 'ஸ்ரவரஸ:' என்ற வாறு எல்லா வகையான சுவையாகவும் இறைவன் இருக்கிருன என்ற உட்பொருள் பாடலில் அமைந்திருப்பது எண்ணியெண்ணி இறும்பூதெய்தத்தக்கது.

இவன் கடல் நிறத்தை உடையவன், சிவந்த வாயையுடையவன். பரந்த ஆழ்ந்த தண்ணளிகொண்டவன். அவன் புளிங்குடி தோய்ந்த தால் கடல் வண்ணன் தன் கருமை நிறம் மாருமல் கடல் போல் கிடந்தான். இக்கருத்தைத் தம் பாடலில் பின்வருமாறு அமைததுப் பாடுகின்ருர் நம்மாழ்வார்.

'கொடியார் மாடக் கோளுரகத்தும
புளிங்குடியும்
மடியா தின்னே நீதுயில் மேவி
மகிழ்ந்ததுதான்
அடியார் அல்லல் தவிர்த்த அசைவோ?
அன்றேல்இப்
படிதான் நீண்டு தாவிய அசைவோ?
பணியாயே!'

(திருவாய்மொழி 8-3-5 (3473))



தேரழந்தூர சிவஸ்தலம்.

திருக்கடிகையிலே வீற்றிருந்து அடியார்களது அல்லல்களைத் தவிர்த்து, களைப்புத் தீர்வதற்குச் சாய்ந்துள்ளான் என்று பெருமானுடைய பெருமையைப் பேசுகின்றது திருவாய்மொழி.

இக்கருத்தைத் திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த திருக்குறுந்தாண்டகம் மிக அருமையாகப் பேசுகின்றது. மானிடப் பிறவியின உறுதியற்ற தனமையினை எண்ணி, அவ் வாழ்க்கைக்கு வேண்டியவற்றையே இறைவனிடம் வேணடி நிற்கினற னரே? ஊன் வாழ்க்கைககுத் தேவையானதை வேண்டாமல் இப் பிறவி என்னும் பெரும் பிணி நீஙக வேண்டியவற்றை அன்ரே இறைவனிடம் வேண்ட வேண்டும்?

'வானிடப் புயலை மாலை வரையிடைப்
பிரசம் ஈன்ற
தேனிடைக் கரும்பின் சாற்றை திரு
வினை மருவி வாழார்
மானிடப்பிறவி அந்தோ! மதிக்கிலர்
கொள்க, தந்தம்
ஊனிடைக் குரம்பை வாழ்க்கைக்கு
உறுதியே வேண்டினரே-2039.

என்று திருமங்கை ஆழவார் மாநிடரை நொந்து பேசுகின்ருர். எனவே மானிடப் பிறவி என்ருல் பவம் அறுக்க வேண்டியது இன்றியமையாதது. அப்படி பவம் அறுக்கப் பட வேண்டுமாளுல் பக்தியில் பழுக்க வேணடும். அப்படி பக்தியில் பழுத் தவர்களின பவம் அறுக்க அக்காரத் தீங்கனியாய் இறைவன் உள்ளான். இப்படி அக்காரம் என்ற சொல்லிற்கு இனிபபு போனற பல பொருள்களை இருப்பினும, இறைவனை அக்காரத் தீஙகனி என்று அழைத்து அவனின் பெருமையைப் பாடுவதோடு மிகச் சிறப்பையும் அச்சொல்லிற்கும் சேர்க்கின்ருர் ஆழ்வார் என்ருல் அது மிகையன்று.



# சௌலப்பிய குணம்

திரு. ச. கறுப்பையா M.Sc., M.Phil.,
இராமநாதபுரம்.

எம்பெருமான் நாராயணனின் திருக்கல்யாண குணங்களுள் சௌலப்பியம என்பதும் ஒன்று. சௌலப்பியமென்றல இறைவனின் எளிவந்த தன்மையாகும். சௌலப்பியம் எனும திருக்குணத்திற்கு விளககமாக அறிஞர் ந. சுப்புரெட்டியார் கீழ்வருமாறு கூறுகிருர்:

"சௌலப்பியம் — எளியனுயிருக்கும் இருப்பு. கணணிற்குப் புலனுகா திருககும் ஈசுவரன தன் திவ்விய மங்கள விக்கிரகத்தை, சேதநன் தன் கண்களாலே கணடு பற்றுதற்கேற்ப எளியனுயிருத்தலாகும இத்திருக் குணம். இறைவன் தான் இருக்கும் பரமபதத்தை விட்டுச் சமுசாரிகளின் இடையில் வந்தவதரித்துத் தன்னை எளியனுக்குகிருன்." (முத்திநெறி. ப. 257) மேலும் அவர், "தனது சௌலப்பிய குணத்தால் அவர்கள கட்டவும் அடிக்கவுமாம்படித் தன்னைச் சுலபனுக்கிக கொள்வான்" (முத்திநெறி. ப. 54) என இறைவனின் சௌலப்பிய குணத்தன்மையைப் புலப்படுத்துகிருர்.

மறற சமயங்கள் இறைவனை ப பெருமையே வாய்ந்தோனுகக கொண்டாட, வைணவம் மட்டுமே வழிபடு கடவுளுக்குப பரத்துவமும சௌலப்பியமும் கறபித்துளது. 'உயாவற உயர்நலம் உடைய இறைவன் இமயம போலப் பரதது வம் எனற பெருமைப் பணபும, கல்லும மணணும் போல சௌலப்பியம் அதாவது எளிமைப்பணபும் ஒரு சேர அமையப் பெற்றவன்' எனக்கொள்வது வைணவமாகும். (தமிழ்ப் பண்பாட்டில் வைணவம் ப. 51). "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" என்றுர் நம்மாழ்வாரும். இறைமாட்சி பற்றிக் கூறப்போந்த வள்ளுவப் பேராசானும், "காட்சிக்கு எளியன் கடுஞ் சொல்லன் அல்லனேல் மீக்கூறும் மன்னன் நிலம்" (குறள்-386) என்றுர். முறை வேண்டுவார்க்கும் குறையிரந் தார்க்கும் அரசன் காண்பதற்கு எளியனுய் இருத்தல் வேண்டும் என வள்ளுவர் விதித்தார். அதுபோலவே இறைவனும் தான் காட்சிக்கு எளியனுய் விளங்கி ஆன்மாக்கட்கு அருள் பாலிக்க விழைகின்றுன். வைணவம் இறைவனின் இக்குணச்சிறப்பை சௌலப்பியம் எனக் குறிக்கின்றது.

கோகுலத்தில் ஒருநாள் கண்ணன் யசோதையின் மார்பில் பாலருந்திக் கொண்டிருந்தான். அடுப்பில் வைத்துக் காய்ச்சுகின்ற பால் பொங்கியதைக் கண்ட யசோதை குழந்தைக் கண்ணனை விட்டு விட்டு முலைப்பால் சோர, மார்பிலணிந்த மாலையிலிருந்து மதுத்துளி சிந்த, அடுப்பை நோக்கி ஓடலானுள். அதுதான் சமயமென்று எண்ணிய கண்ணன் பெரிய தாழியில் மறைத்து வைக்கப்பட்டிருந்த வெண்ணெய்த் தாழியை உடைத்து வாரிக்கொண்டோடினன். வேதவித்தகரும், சிறந்த தவத்தோருமாகிய முனிவர்களும் தொடரவியலாத திருமாலை யசோதை தொடர்ந்து விரட்டிச் சென்றுள்; அலுத்தாள்; அன்னை இளைத்தது கண்டு கணணன் தாயின் கையகப்பட்டான். யசோதை கண்ணனின் இரு கால்களையும் உரலோடு சேர்த்துப் பிணிக்கலுற்றுள். ஆயின், அவள் தேடித்தேடிக் கொணர்ந்து கட்டிய கயிறெல்லாம் இருவிரலளவு குறைந்தன. கை சிவக்க, நெற்றி வியர்க்க முயன்றும் கட்டவியலாமல் தாய் யசோதை வருந்துதல் கண்ட கண்ணன் தான் விரும்பியதால் தாயால் கட்டுண்டான். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளாகிய இறைவன் இவ்வாறு எளியனுகி உரலில் கட்டப் பட்டான். இதைத் தான் சௌலப்பியப் பண்பு என்பர். இக்காட்சியைச் செவ்வைச் சூடுவார்,

"வீக்கி வீக்கித்தன விரைகமழ்
தாமரைச் செங்கை
சேக்க அம்கதிர்த் திங்களஞ்
சிறுநுதல் வியர்ப்ப
மாக்கண் வெம்முலை மடவரல்
வருந்துதல் நோக்கி
யாக்கப் பட்டனன் எங்கணும்
நிறைந்த அவ் விறைவன்"
(பாகவதம் - 2775)

எனச்சித்தரிக்கின்றுர்.

இன்பத்தொல்லை ஈந்து இறைவன் தன் சௌலப்பிய குணத்தைக் காட்டியதாய்க் குலசேகரர் கற்பனை செய்கின்றுர். கண்ணன் ஒரு நாள் தன் வீட்டிலேயே வெண்ணெயைத் திருடித் தின்னலானுன. கையும் களவுமாய்ப் பிடிபட்டான். யசோதை அவனைத் தாம்புக் கயிற்றுல் நையப் புடைக்கலானுள். அப்போது, தாழியிலிருந்து வெண்ணெயைத் தன் தாமரைக்கையால் அளைந்து தொட்டுண்பதும், தாய் தாம்புக் கயிற்றுல் அடிக்கவர, அதுகண்டு கண்ணன் கூசுதலும், அடிவிழுந்தவுடன் அழுதலும், மேலும் தாய் அடித்திடக்கூடாதே என்றஞ்சுதலும், அழும் போதே வாய் நெளிப்பதும், 'அடித்தது போதும் அணைத்திடல் வேண்டும்' என்ற பான்மையில் அவளைத் தொழுதலும் ஆகிய காட்சிகள் கண்ட யசோதை தொல்லையின்பத்து இறுதி கண்டாள். 'தான் அப்பேறுகளுள் ஒன்றும் பெற்றிலனே' எனத் தேவகி புலம்புவதாக ஆழ்வார் கற்பனை செய்கின்றுர். உலகெலாம் காத்தளிக்கும் முழுமுதற்பொருளாம் கண்ணன் தான் விரும்பி ஏற்ற மானிடப் பிறப்பில் இவ்வாறு எளியனுகித் தாயால் தன்

டிக்கப்படும் நிலைக்குத் தன்னை ஆட்படுத்துகிறான். என்னே அவன்தன் எளிவந்த தன்மை! இதனை,

"முழுதும் வெண்ணெய் அளைந்துதொட்
டுண்ணும் முகிழிளஞ்சிறுத் தாமரைக்
கையும் எழில்கொள் தாம்புகொண்
டடிப்பதற்கெள்கும
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ்
வாயும் அழுகையுமஞ்சி நோக்குமந்
நோக்கும் அணிகொள் வாய்நெளிப்
பதுவும
தொழுகை யுமிலை கண்ட அசோதை
தொல்லை யின்பத் திருதிகண்டாளே"

(திவ்யப்பிரபந்தம் - 715)

எனும் பெருமாள் திருமொழியால் அறியலாம்.

பாரதத்தில் ஒருகாட்சியைக் காண்போம். தருமன் உலூக முனிவரைத் துரியோதனனிடம் தூதனுப்ப, அத்தூது தோல்வியுற்றது. பின், திருதராட்டிரன் சஞ்சய முனிவர் மூலம் பாண்டவர்க்கு விடுத்த தூதுச்செய்தி பாண்டவர்க்கு நன்மை செய்வதாய் அமையாததால் அதுவும் தோற்றுப் போயிற்று. பின்னர்த் தருமன் கண்ணனைத் துரியோதனனிடம் தூதனுப்பத் தீர்மானித்தான். சமாதானத்தை வற்புறுத்தித் தருமன் கூற, அது கேட்ட கண்ணன் சகாதேவனைநோக்கி 'மகாபாரதப்போர் நிகழா வண்ணம் தடுக்க யாது வழி, கூறுக' எனக் கேட்டான். அதற்குச் சகாதேவன, "கண்ணா! பாரதப்போரில் எல்லாரையும் அழியச் செய்து பூபாரம் குறைக்கச் சங்கற்பம் கொண்டுள்ள நின்னையல்லால் யாரே தடுக்க வல்லார்! இருப்பினும், கர்ணன் நாடாளும்படி அவனிடம் பகைமை பாராட்டும் விசயனை முன்னே கொன்று விட்டுப் பின், பாஞ்சாலியின் கூந்தலை அரிந்து விட்டு, நின் கால்களில் விலங்கிட்டுக் கைகளையும் பிடித்து நின்னையும் நான் தகுதியாகக் கட்டி வைப்பேனாயின, மகாபாரதப் போர் வராமற் காத்திடலாம்" எனத் தன உள்ளக்கிடப்பைச் செப்பினான். அதற்குக் கண்ணன் 'நீ முன்னம் கூறியனவெல்லாம் முடிந்தாலும், என்னை நீ கட்டும் வகை எவ்வாறு?' எனக் கேட்டான். அதற்குச் சகாதேவன், 'நீ, உனது அழகிய வடிவத்தை என் அறிவிற்கு உணர்த்தியுள்ளமையால், யான் நின்னைக் கட்டுவேன்' என்றான். மாயனும் சகதேவனின் மனக்கருத்தறியத் திருவுள்ளங்கொண்டு 'கட்டுக நீ' எனச் சொல்லிப் பொருந்திய பதினாறாயிரம் வடிவங் கொண்டான். தூயவனும் சகாதேவன் அவ்வடிவங்கட்கெல்லாம் மூலத் திருவுருவத்தைத் தன மெய்யறிவால் அறிந்து உலகளந்தான் திருத்தாளிணையைத் தன் மன மாயக கயிற்றால் கட்டினான். அடியவர்க்கு எளியனும் தன்மையனன்றோ கண்ணன! ஆகவே அயன் அரனுக்கு எட்டாத இறைவன் தன பக்தன விரித்த அன்பெனும் வலையுட்பட்டான். அப்போதே திருமால் தன் கடவுட்கோலத்தைச் சகாதேவனுக்குக் காட்டியருளினான். இவ்வாறு மெய்யடியார் தம் உண்மையான பக்தியை உலகறியக் காட்டுவதற்கும், அடியவர் தாம் இட்ட சவாலில் வெல்லும் பொருட்டும், அனைத்து வல்லமையுடைய இறைவன் தனக்கேயுரிய சௌலப்பிய குணத்தால் எளியனாகித் தோற்றது போல் பாவனைசெய்ததும் அறிந்தின் புறத்தக்கன. இக்கருத்து,

"மாயவனும் அன்பன மனமறிவான
கட்டுகவென்று ஆயவடிவு
பதினாறாயிரங் கொண்டான் தூயவனு
மூலமாநதோற்றமுணர்ந்
தெவ்வுலகுந் தாயவடி யிணைகள்
தன கருத்தி னாற் பிணித்தான"

(வில்லிபாரதம்-கிருஷ்ணன
தூதுசருக்கம்: 37)

எனும் வில்லியார் பாடலால் அறியத்தகும்.

சாதாரண மக்களும் கடைத்தேற எளிய வழியாக உள்ளது விக்கிரக ஆராதனையே. அர்ச்சையைத் தேங்கின மடு என்றும், இருட்டறையிலுள்ள விளக்கு என்றும் கூறும் ஸ்ரீ வசன பூஷணம். அத்தகு சௌலப்பியகுணமுடைய திருமாலைச்சேவித்து உய்வோமாக.

*



ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி-திருப்பதி.

யானை என்றதுமே ஆஸ்திகர்களுக்குப் பெருமாள் புறப்பாட்டின் போது முன்னே செல்லும் கம்பீரமான மிருகத்தின ஞாபகம் வரும். தசரதன, சக்ரவர்த்தித் திருமகனை யௌவ ராஜ்யத்தில் பட்டாபிஷேகம் செய்யப் போவதாகச் சபையில் ப்ரஸ்தாவித்ததும், நகர மகா ஜனங்கள் அதை மிக்க உத்ஸாஹத்துடன் ஆமோதித்துமன்றி, பட்ட யானையான ஸ்ரீ சத்ருஞ்ஜயன்மீது பவனி வரும் இராமனைத் தாங்கள் காண விரும்புவதாகப் பெருத்த ஆரவாரம் செய்தனர் என்றார் வால்மீகி.

தனது பரதவத்தை நிலை நாட்டிய பெரியாழ்வாரை அநுக்ரஹிக்க எம்பெருமான் கருட வாஹனனாகத் தோனற, "வாரணம் மேல மதுரை வலம் வரவே" எனறபடியே, மதுரையைப் பவனி வநது கொண்டிருந்த பெரியாழவார் யானை மேல் இருந்து

கச்சி 'ஹஸ்திகிரி' என்று பெயர் பெற்று விளங்குகிறது எனறு ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் கூறும். அதில் अनाद्यनन्तं पुरुषं पुराणं என்று தொடங்கி 'கஜேந்திரன் பேரருளாளனைக் குறித்து வேதாந்த அர்த்தஙகள் பொதிந்த அழகான ஸ்தோத்ரம் செய்துள்ளான்.

கஜேந்திர மோக்ஷம் மிகவும் புனிதமான சரிதம். ग्राहग्रस्ते गजेन्द्रे முதலிய ச்லோகங்களால் பெரியோர் தினமும் அதிகாலையில எழுந்ததும் அநுஸந்திப்பது வழக்கம். 'ஆதிமூலமே' என்று கஜேந்திரன் கூப்பிட்டபோது, மற்றத் தேவதைகளெல்லாம் "இதற்கு நாம் இலக்கல்ல" என்று விலக, ஸ்ரீமந் நாராயணன் நேரில் அரை குலையத் தலைகுலைய ஓடி வந்து யானையைக் காத்ததனால் பகவானின் பரத்வத்தை ஸ்தாபித்த பெருமை, பெரியாழ்வாரைப் போல், இந்த யானைக்கும் உண்டு.

தழுவி முழுகிப் பரிமாறவும் துடிக்கும் வைஷ்ண வாக்ரேஸரர்களை நேரில் முகங்காட்டாமல் காக்க முடியாதாகையால், பகவான் அவதாரம் செய்கிறான். பக்தர்களின் அபிலாஷையைப் பூர்த்தி செய்வதே அவதாரத்தின் முக்ய ப்ரயோஜனம்' என்று பாஷ்யகாரர் கீதா பாஷ்யத்துள் அருளியுள்ளார். "தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே" என்று இதைத் திருவாய்மொழியில் நம்மாழ்வாரும் வெளியிட்டார். "என்றோ ஒரு நாள் அழியப் போகிற இந்த சரீரத்துக்கு நான் கரையவில்லை. என் கையிலுள்ள புஷ்பத்தை உனக்கு ஸமர்ப்பிக்க முடியவில்லையே என்றுதான் வருந்துகிறேன்" என்று கஜேந்திரன் விண்ணப்பம் செய்ததாக ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. கஜேந்திரனின் கையிலிருந்த புஷ்பத்தை பரிக்ர

# யானையைப் பற்றிய சிந்தனைகள்

கொண்டே அவனுக்குப் பல்லாணடு பாடினார்.

வரதராஜ பஞ்சாசத்தில் मुहुस्त्य-भङ्गुरधियो मुनिसार्वभौमाः என்றும अस्पृष्ट-चिन्तापदमाभिरूप्यं என்றும அருளியபடியே, நெஞ்சுக்கும் நிலமல்லாத தனது ஸௌநதர்யத்தால் ஆழ்வார்களைப் போனற பரம பகதர்களை மோஹிக்கச் செய்யும் வரதனின உத்ஸவங்களை அநுபவிக்கப் புகுநத ஸவாமி தேசிகன 'ஆனை பரிதேரின


திரு. எல் சீனிவாசன்,
புதுதில்லி


மேல் அழகர் வநதார' எனறு திருச்சின்னமாலையில் யானை வாஹனத்தை முதலில் எடுத்தார்.

கஜேந்திராழ்வான் தவம் புரிநது மோக்ஷமடைந்த ஸ்தலமாதலால்

ஸ்ரீ பராசர பட்டர் भगवतस्त्वरायै नमः என்று, இப்படி பக்தனை ஆபத்தில் ரக்ஷித்த பகவானைவிட, அவன் வந்த வேகத்திற்கு நமஸ்காரம் என்று ஸ்ரீரங்க ராஜ ஸ்தவத்தில் ஈடுபடுகிறார். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில शब्दसहः முதல் रुचिराङ्गदः வரை (912 முதல் 945) உள்ள நாமாக்கள கஜேநதிர மோக்ஷ ஸமபந்தப்பட்டவை எனறு ஸ்ரீ பகவத் குணதாபணததில் ஸ்ரீ பராசர பட்டர் வயாகயானம் அருளியுள்ளார.

"பகவான் தன ஸங்கல்பத்தினாலேயே துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்ய வல்லவனாகையால் இதற்காக அவதாரம் செய்ய வேண்டிய அவசியம் ஏது?" என்ற கேள்வி எழுகிறது. இதற்குப் பதிலாக 'தன்னை விட்டு ஒரு க்ஷணமும பிரிந்தால் தரிக்க முடியாமலும், தன்னுடன

ஹித்து, புண்பட்ட அவனது காலைத் தடவிக் கொடுத்து ஆச்வாஸம் பண்ணுவது பகவானுக்கும் ஸங்கல்பத்தால் முடியாத காரியம்; நேரில் வந்தே செய்ய வேணடிய பணி. 'ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை என்று ஜீயர் அருளிச் செய்வர்' என்றது ஸ்ரீவசந பூஷணம். முதலையைக் கொன்று பரம பாகவதனான ஆனையை விடுவித்ததும் ஓர் ஆனைத்தொழிலேயாம், ஓர் அரும்பெரும் செயலேயாம்.

மேலும், कयाधुसुत-वायस-द्विरदपुङ्गव-द्रौपदी என்றபடியே திர்யக்குக்கும் பகவான் அருளினான் எனபதனால், சரணாகதனை அவன் கைவிட மாட்டான் என்று கஜேந்திர மோக்ஷத்திலிருந்து நமக்கு ஒரு மஹா விசவாஸம் உண்டாகிறது. "ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன்



ஆனைக்கு நீ அருள் செய்தமையால்'' என்று பெரியாழ்வார் இதை அநுஸந்தித்தார். 'மதயானை கோள் விடுத்து மாமுதலை கொன்ற கதையால் இதயம் க்ரையும்' என்று தெய்வகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் நூற்றெட்டு திருப்பதி அந்தாதியில் இதில் மிகவும் ஈடுபடுகிறார். 'விண்ணுளார்வெள்கி நிற்ப ஆனைக்கு அன்று அருள் செய்த கண்ணரு' என்றும் 'கவளமால் யானை கொன்ற கணணனை அரங்கமாலை'' என்றும் கஜேந்திர மோக்ஷத்தையும் கம்ஸனால் ஏவப்பட்ட குவலயாபீடம் என்ற மதயானையைக் கொன்றதையும் தொண்டரடிப் பொடியாழ்வார் தனித்தனியே அநுஸந்தித்தார். ''ஓரானைக்கொம்பொசித்து ஓரானைக் கோள் விடுத்த சீரானை''என்று இரண்டையும் சேர்த்து அனுபவித்தார் திருமங்கை மன்னன் சிறிய திருமடலில். கஜேந்திரமோக்ஷம், குவலயாபீட நிரஸனம் என்ற இரண்டையும் ஒன்றாகக்கூறி, மேலும் பெரியாழ்வார் அதே இடத்தில் ''கருவாரணம்தன் பிடிதுறந்தோட. கடல் வண்ணன், திருவாணைகூறத்திரியும் தன் திருமாலிருஞ்சோலையே'' என்று அருளினர். அதாவது, திருமாலிருஞ்சோலையில் ஓர் பெண் யானை ப்ரணய ரோஷத்தால் ஆண்யானையிடமிருந்து பிரிய, அப்போது களிறு அழகா திருவடிமேல ஆணையிட்டதனால் அதற்குக் கட்டுப்பட்டு அது போகாமல் நின்றது என்றபடி. இதையே ஸுந்தரபாஹுஸ்தவத்தில் கூரத்தாழ்வானும் सुन्दरदोर्दिव्याज्ञा என்ற சலோகத்தில் அருளினர். ஆக திவ்ய தேசங்களில் வசிக்கும யானைகளுக்கும் தெய்வ பக்தி உண்டு என்பது ஆழ்வார் ஆசார்யர்கள் திருவுளளம.

அஷ்ட திககஜங்கள் பூமியைத் தாங்குகின்றன என்று புராணஙகள் கூறும். ஹிரண்யன் அஷ்டதிக்கஜங்களைக் கொண்டு ப்ரஹ்லாதனைக் கொல்லமுயன்றன். ஆனல் அவை தந்தங்கள் அறுபட்டு பூமியில் விழுந்தன. ''அந்த திக்கஜங்கள் கொசுக்கள் மலையையும், விளக்கு விட்டிற் பூச்சிகள் நெருப்பையும், துன்பங்கள் ஆத்ம ஜ்ஞானம் கைவந்த ஞானியையும், ஆடுகள் யானைகளையும் போல் ஒன்றும் செய்யமாட்டாதவையாயின'' என்று ஹரிபக்தி ஸுதோதயம் கூறுகிறது.

யானைகளுள் சிறந்ததான ஐராவதம் பாற்கடலுள் மஹாலக்ஷ்மியுடன் தோன்றிய பெருமையுடையது. ஸ்வாமி தேசிகன் யாதவாப்யுதயத்தில் ஐராவதத்தை உயர்ந்த யானையின் லக்ஷணங்களோடு அழகாக வர்ணித்துள்ளார். பாற்கடலுள் தோன்றிய மஹாலக்ஷ்மியை ஐராவதம், புண்டரீகம் முதலிய எட்டு திக்கஜங்கள் பொற்குடங்களைக் கொணடு அபிஷேகம் செய்தன. இருபததைநது சலோகங்கள் கொண்ட ஸ்ரீஸ்துதியில் ஸ்வாமி தேசிகன் இந்த அபிஷேகத்தை 13-ம் ச்லோகத்தில் நடுநாயகமாக அமைந்துள்ளதும் ஓர் அழகு. பல திவ்ய தேசங்களில் தாயார் கஜலக்ஷ்மியாக ஸேவை ஸாதிப்பதையும் காண்கிறோம்.

ஆயிரம் யானைகள் சூழ்ந்து தன்னை மணக்க கோளரி மாதவன் வந்ததாகத் தான் கனுக் கண்டதாக "வாரணமாயிர"த்தில் ஆண்டாள் பாசுரம். ஸ்ரீஸூக்தம் மஹாலக்ஷ்மியை हस्तिनाद-प्रबोधिनी என்று கூறுகிறது. மங்களமான யானையின் பிளிறலால் துயில் எழுப்பப் பெறுகிறவள் என்பது இதன் பொருள். இது லக்ஷ்மீ ஸஹஸ்ர நாமத்திலும் 989-ஆம் நாமாவாகப் படிக்கப் பெறுகிறது. இதற்கு வேறு பொருளும் கூறுவர். அதாவது, தான் வீற்றிருக்கும் மங்களாஸனமான தாமரை இதழ்களிலிருந்து துதிபாடும் யானை வடிவமுள்ள குக்குலு, குண்டகர், தமனகர், சசிலர் இவர்களின் இனிய குரலோசையால் விழித்துக் கொள்பவள் என்றபடி. இது மங்கள ஸம்ஹிதையை அநுஸரித்தது. यस्य द्विरदवक्त्राद्याः என்றபடி கஜமுகன் ஆகியோர் ஸேனை முதலியாரின் பார்ஷதர்கள். ஸ்ரீமந் நாதமுனிகள் கஜமுகனின் - அவதாரம் என்று திவ்யஸூரி சரிதம் கூறும் "இருங்களிற்றீட்டமும் பிடியொடு முரசும்" என்று திருப்பள்ளியெழுச்சியில், "ஆண் பெண் யானைத்திரள்கள் சப்திக்கின்றன; திருப்பள்ளியை விட்டு எழுந்திருக்க வேண்டும்" என்று அரங்கனுக்குத் துதிபாடுகிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்.

கட்டுக்கடங்காத நம் இந்திரியங்களை மதயானைகளுடன் ஒப்பிடுவதுண்டு. "வாரி சுருக்கி மதகளிறைந்தினையும்" என்ற பாசுரத்தில் பொய்கையாழ்வார், மதம் பிடித்த ஐந்து யானைகளைப் போன்ற பஞ்சேந்திரியங்களையும ஜலம் போன்ற சப்தாதிகளினின்றும் இழுத்துப் பிடித்து கண்ட இடங்களிலும் திரியவொட்டாமல் செவ்வையாக நிறுத்தி உண்மையான பக்தி ரூபாபன்ன ஜ்ஞானத்தாலே பகவானை உள்ளபடி உணர வல்லவர் எம்பெருமானின் திருவடிகளைக் கண்டு அநுபவிக்கப்பெறுவர் என்று அருளினார். பஞ்சேந்திரியங்களை யானையாகக் கூறிய இங்கு "மேலொரு நாள் கைந்நாகம் காத்தான் கழல்" என்று முன்பு கஜேந்திரனை ரக்ஷித்த எம்பெருமானின் திருவடிகள் என்று அருளிய அழகை அநுபவிக்க வேண்டும். அட்டபுய கரத்தானைப் பாடாநின்ற பேயாழ்வார் "குட்டத்துக்குக் கோள் முதலை துஞ்சக் குறித்தெறிந்த சக்கரத்தான் தாள் முதலே நங்கட்கு சார்வு" என்று பாடினார். அதை அநுஸரித்து गजेन्द्र-रक्षात्वरितं भवन्तं என்று அஷ்டபுஜாஷ்டகத்தில் ஸ்வாமி தேசிகன் ச்லோகம். அதாவது "ஒரு முதலையிடம் அகப்பட்ட யானையைக் காக்க விரைவாக எழுந்தருளினையே. பஞ்சேந்திரியங்களான ஐந்து முதலைகளிடம் அகப்பட்டுத் தவிக்கும் அடியேனைக் காக்க வேண்டுமென்று உன்னைச் சரணடைகிறேன்" என்றார்.

பகவத் த்யான ஸோபனத்தில் एकं लीलोपहितमितरं என்ற ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் தனது சிந்தையை ஓர் பெண் யானையாகவும், அரங்கனின் திருவாபரணங்களின் ஒளி என்னும் கயிற்றால் அது இறுகப் பிடித்துக் கட்டப்பட்டதனால் தன் செருக்கு ஒழியப் பெற்று இன்ப போதையில் மயங்கிக் கிடக்கிறது என்றும் அநுஸந்தித்தார். அதே போல் யதிராஜ ஸப்ததியில் मुकुन्दाङ्घ्रि क्ष्मा என்ற ச்லோகத்தில் ஸ்ரீ பாஷ்ய காரரின் இரண்டு திருவடிகளும் இவ்வுலகில் அஜ்ஞானமாகிய பெருங் காட்டின் நடுவில் விளையாடுகிற தம் மனமாகிய மதங்கொண்ட யானைக்கு முதல்விலங்காக விளங்குகிறது என்று ஸாதித்தார். "தன் கண்முன்னே உள்ள வஸ்துவையும் சரியாக அறியாமல், தண்டித்தாலும் செருக்குக் கொண்டதாய், ஸ்நானம் செய்வித்த பிறகும் புழுதியையே விரும்புமதாய், நெருங்கி உபசரித்தாலும் பயங்கரமாக உள்ள உனது யானை போன்ற என்னை நீயாகவே உன் அநுக்ரஹமாகிய சங்கிலியால் கட்டிப்பிடித்துக் கொள்ள வேண்டும்" என்று दृष्टेऽपि दुर्बलाधिय् என்ற ச்லோகத்தால் தயா சதகத்தில் தயாதேவியைக் குறித்தும் ப்ரார்த்தனை செய்கிறார் ஸ்வாமி தேசிகன். யதிராஜஸப்ததியில் முதல் விலங்கு, இது இரண்டாவது விலங்கு. யானையை அநுக்ரஹத்தால், அதாவது அதன் பின் சென்று சங்கிலியால் கட்டிப்பிடிப்பர். அதே பதத்தை உபயோகித்து, தயாதேவி தனது அநுக்ரஹ ரூபமான, அதாவது கருணை வடிவமான, சங்கிலியால் தொடர்ச்சியால், தம்மைக் கட்டிப் பிடிக்க வேண்டும் என்று சாதுர்யமாக உரைத்திருப்பதன் அழகை நாம் அநுபவிக்க வேண்டும்.

ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தில் பட்டர் "வடமொழி, தென்மொழி வேத வாக்குகளால் அழகாக அபிஷேகம் செய்யப் பெற்ற அரங்கன் என்னும் யானை, அதன் பிறகு என் இனிய புன் கவிதையையும் ஏற்பதனால் தன்னை மலினமாக்கிக் கொள்கிறான். புழுதியணைவதில் ஆசை கொண்ட யானையைத் தடைசெய்ய யாரால் முடியும்?" என்ற நைச்யாநுஸந்தானம் பண்ணுகிறார்.

வனவாஸத்தின போது ராமனின் நடையைக் கண்ட யானையும், ஸீதையின் நடையைக் கண்ட அன்னமும் வெள்கிச் சென்றன என்றான் கம்பன். गजसिंहगतीवीरौ शार्दूलवृष भोपमौ என்று வால்மீகி ராமலக்ஷ்மணர்களின் நடையழகை வர்ணித்தார். இவர்களுடைய நடையில் மத்த கஜத்தின் மதிப்பும், புலியினுடைய சிவிட்கும், பிறரை அடக்கும் சிங்கத்தின்திறனும், ரிஷபத்தின் செருக்கும் தோன்றும் என்றபடி. இந்த நான்குவிதமான கம்பீர நடைகளும் நம்பெருமாள் நடையில் நமக்குக் காணக் கிடைக்கும் என்பர் பெரியோர்.

பூமி முதலிய பலவற்றினிடமிருந்து நாம் கற்க வேண்டியுள்ளன பற்பல என்று ஸ்ரீமத் பாகவதத்தில் உத்தவருக்கு க்ருஷ்ணன் உபதேசம் செய்யும் போது, பெண்யானையைக் கண்டு ஆண் யானையைக் கட்டுப்படுவது போல், ஸ்திரீயைக் கண்டு மனம் மோஹிக்கலாகாது என்று கூறுகிறார்.

நம் ஆசார்யர்கள் புறச்சமயங்களை வெல்பவர் என்பதைப் பல உதாஹரணங்களால் காண்பிப்பதுண்டு ஆக்கியாழ்வானை வெல்லச் சென்ற ஆளவந்தார் "நாம் கேவலம் கவிகளல்ல, சாஸ்திரங்களை மட்டும் கற்றுணர்ந்தவர்களல்ல, மதம் பிடித்த யானையின் மதத்தை அடக்கக் கூடிய ஸிம்ஹங்கள்" என்று கோஷித்தார். திருவரங்கத்தமுதனார் 'பண்டருமாறன் பசுந்தமிழ்' என்ற பாசுரத்தில் "ஸ்ரீராமானுசனை மத்தகஜம் நம்மாழ்வாரின் செந்தமிழான திருவாய்மொழியை அநுஸந்தித்த ஆனந்தரஸமே ஒழுகு மதநீராய்ப் பெற்று, ஸத்யவாதியான நல்ல வேதமாகிற பெரிய தடியைத் தூக்கிக்கொண்டு இந்தப் பூமண்டலத்தில் உங்களை நெருங்கிக்கொண்டு வருகிறது. ஆகையால் வாதியாகளே! உங்கள் பிழைப்பு போயிற்று" என்று அருளினார். 'ஆரண நூல் செவ்வை' என்ற பாசுரத்தில் ஸ்வாமி தேசிகன் "வேதாந்தங்களுக்குத் தம் மனம் போனபடி அர்த்தத்தைக் கற்பிக்கும் ஹைதுகர்களுக்கு ஸ்ரீ பாஷ்யகாரர் ஓர் மதயானையாக நின்று, அவர்களின் வாழை போன்ற ஸாரமற்ற வாதங்களை அநாயாஸமாக முறித்துத்தள்ளினார்" என்று அநுபவிக்கிறார். यथा युवानं राजानं என்ற ச்லோகத்தில் மதம் பிடித்த யானையிடம் நடந்து கொள்வது போல் பகவானை ஜாக்கிரதையாக உபசரிக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

யானைக்கும் எம்பெருமானுக்கும் பலவிதங்களில் ஸாம்யம் உண்டு. யானையை ஒருநாள் கண்டால் நாம் திருப்தியடைவதில்லை. பகவானையும் ஒருநாள் மட்டும் ஸேவித்துத் திருப்தியடைகிறோமல்லோம். யானை மிகுந்த செருக்குடையது. பகவானும் நிரங்குச ஸ்வாதந்தர்யம் படைத்தவன். யானை தன்மீது ஏற நினைக்கும் பாகனுக்குத் தன்னைப் பணிந்து கொடுக்கும். பகவானும் கர்மம், ஜ்ஞானம் முதலிய உபாயங்களால் தன்னை அடைய விரும்புமவர்க்குத் தன்னைக் கொடுக்கும் சீலமுடையவன். உதவாதாரை யானை கொன்று போடும். பகவானும் தன் அடியாரின விரோதிகளை அழித்தே தீருவான். யானை தன்னைக் கட்டுவதற்குக் கயிற்றைத தானே எடுத்துக் கொடுக்கும். பகவானும் தன்னைக் கட்டுப்படுத்துமாறு "எட்டினொடு இரண்டெனும் கயிறு" என்ற பக்தியாகிற கயிற்றைத் தானே தன் பக்தர்களுக்குக் கொடுக்கிறான். ஆதலால் யானை பகவானுக்கு முற்றுவமை. ஆகவே பகவானை யானையாகவே ஆழ்வார்கள் பல இடங்களில் அநுஸந்தித்துப் போந்தார்கள்.

"தொடர் சங்கிலிகை சலார்பிலா ரென்ன" என்ற பாசுரத்தில் பெரியாழ்வார் குழந்தை கண்ணன் தளர் நடை நடந்ததை மதயானையின் நடையோடு ஒப்பிடுகிறார். தளர் நடையாவது திருவடிகளை நன்றாகப் பதிய வைத்து நடக்கும் பருவமன்றாகையாலே, குழந்தை தட்டுத் தடுமாறி நடக்கும் நடை. யானை மதத்தின் மிகுதியால் கட்டுத்தறியை முறித்து விட்டுக் காலிலிட்ட இரும்புச் சங்கிலியை இழுத்துக் கொண்டு நடக்கையால் அந்தச் சங்கிலித்தொடர் சலார்பிலார் என்று சப்திக்கிறது. பொற்கயிற்றால் கட்டி அதன் இரு புறத்திலும் தொங்கவிட்ட மணிகள் ஒலிக்கின்றன. மதநீர் பெருக யானை மெல்ல நடக்கிறது. அதே போல் கண்ணன் தளர் நடை நடக்கும் போது காலில் அணிந்த பாதச் சலங்கை கிண கிண என்று சப்திக்கிறது. இடையில கட்டிய சிறு மணிகள் பறை போல ஒலிக்கின்றன. நடக்கிற ஆயாஸத்தினால் உடலில் வியர்வை பெருகுகிறது. இவ்விதம் யானை போல் காணப்படுகிறான். "கைம்மா நடையன்ன மென்னடையும்" என்பதும் காண்க.

பெருத்த ஐச்வர்யம் படைத்தவர்களே யானையை வைத்துக்காப்பாற்ற முடியும். "மத்தக் களிற்று வசுதேவர் தம்முடை" என்றபடியே அப்படிப்பட்ட ஐச்வர்யமுடையவர் வசுதேவர் என்றார் பெரியாழ்வார். தவிரவும், களிறான கண்ணனைக் குழந்தையாகப் பெற்றவர் வசுதேவர் என்றும் கூறுவர். "உந்து மதகளிற்றன்...... நந்தகோபாலன்" என்ற விடத்திலும் இந்த நிர்வாஹம் உண்டு. திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் "கோதிலின் கனியை நந்தனார்களிற்றை" என்றே அருளினார்.

மெய்விரதமான்மியத்தில் ஸ்வாமி தேசிகன் "பிடி இரண்டோடு கவளமொன்று பிணைந்த பேரழகோதலாம்" என்று ஸ்ரீ பூதேவிகளுடன் பேரருளாளனின் சேர்த்தியை அநுபவிக்கிறார். மேலும் தேவநாயக பஞ்சாசத்தில் जय विबुधपते என்ற ச்லோகத்தில் "தேவ நாயகனே! மதங்கொண்ட யானை போல், வணங்கியவர்களின் பாவங்களைத் தாமரைக் காட்டைப் போல் அழித்துக்கொண்டு, கருடநதியின் கரையில், பெண் யானைகள் போன்ற பெரிய பிராட்டி பூமிதேவிகளுடன் பிரகாசித்துக் கொண்டு வெற்றி கொண்டருள்" என்று ப்ரார்த்திக்கிறார்.

திருமங்கை மன்னன் திருநெடுந்தாண்டகத்தில், "கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ் கச்சிமேய களிறு" என்று எம்பெருமானை வர்ணித்தார் மேலும் "என்னானை; என்னானை! — எனது யானையே, எனது யானையே" என்று சொல்லும் இத்தனை அல்லாது வேறு என்ன சொல்ல அறிவேன்? என்கிறார். தவிரவும், எம்பெருமானை "தென்னானாய், வடவானாய், குடபாலானாய், குணபால மதயானாய்" என்று தெற்கில் திருமாலிருஞ்சோலையிலும், வடக்கில் திருவேங்கடத்திலும், மேற்கில் கோயிலிலும், கிழக்கில் திருக்கண்ணபுரத்திலும் இருக்கும் யானை என்றே அழைக்கிறார். இங்கே "திருமங்கை மன்னன் காட்டின திக்கஜங்கள் இருக்கிறபடி" என்ற வ்யாக்யான ஸ்ரீஸூக்தி போக்யமானது.

ஆக, யானை பலவிதங்களில் பகவத் ஸம்பந்தம் பெற்றது. அதைப் பற்றிய சிந்தனையும் நமக்கு ஆத்மோஜ்ஜீவனஹேதுவானதே.



# சிறுவர்ப் பகுதி

# சமய நெறியும் சாதி வெறியும்

சமயம் என்பது மனித மனத்தை அனறுட வாழ்க்கையின் தவிப்புகளி லிருநது உயரே, எட்டி அழைத்துச் செலவதற்கான ஓர் அறைகூவல். சாதி என்பது அன்றுட வாழக்கைக காக அமைத்துக்கொணட பாகுபாடு. முனனது அழைப்பு, பின்னது அமைப்பு. சமயம் தனி மனிதர்களை கைதூக்கி விடுவது. சாதி சிலர்-பல ரைச சேர்த்து பிரித்து வைப்பது. ஒன்றில் மன நிறைவு, லட்சியம எனில், மறறதின் நோக்கம வயிறு நிரமபுதல் எனலாம! ஒன்று உலகிய லிலிருநது உயரே இயங்குவது. மற றது மண்ணுேடு மணணுக ஒட்டி நிற பது.

சமயம் பல பெரியோர்களைக் கண் டுள்ளது. சமய நெறியாளர்கள் எனறு அவர்களைப் போற்றுவர். அதில் ஊறி நின்றவர்களை வேறு வெறிகள் பற்றமாட்டா.

சைவம், உதாரணமாக, ஒரு சம யம. அன்பே சிவம் என்பர் சைவ சமயிகள். திருஞானசம்பநதர் சைவசமயக குரவருள் ஒருவர். சிவ பாத ஹிருதயா என்ற அநதணர்க்கு அருமைக் குழநதையாக அவதரித தவர்—இவவாறு சம்பந்தா பெருமா னின் வாழ்க்கை வரலாறு தொடங கும். அதற்குப் பின் 'அந்தணர்' இநதணர் எனற பேசசே இராது. சைவர்கள் எனபோா ஞானசம்பநத ரைத் தெயவமாகவே கொணடாடு கிருர்கள் எனில் அது மிகையல்ல. நால்வர் திருவுருவப்படத்திலோ தனியாகவோ சீாகாழிச செல்வா சைவசமயிகள் வீடுகளிலே விளஙகு கிருர். அன்றிலிருந்து இனறுவரை அரசியல் காரணஙகளுக்காகவோ அல் லது வேறு சமுதாய, பொருளாதார விவகாரங்களுக்காகவோ அநதணா களை அதிகம் மதியாத, விரும்பாத வராக இருப்பவர்களும் திருஞான சம்பந்தரின திருநாமத்தைப் பெரு மையோடு சூடிககொள்வதைப் பார்க் கிறோம். பிராமணர்கள் என்போர் அத்துவைத நெறியில ஆதிசங்கரர் வழி செலபவர்கள். மெய்கணடார் கண்ட சைவ மரபினர் அல்ல எனவே அங்கெல்லாம் சமய நெறியைக் காண கிறோம். குறுகிய சாதி உணர்வு குரல் எழுப்பவில்லை.

சைவததிலேயே உட்புகுந்தால் இன்னொரு பெரும் குரவர் திருநாவுக் கரசு சுவாமிகள். அந்த அப்பர் அடி கள் வேளாளத திருக்குலததில் பிறந தவர் எனக் கதை தொடஙகும். அவர் கள் மீது பக்தி செலுத்தி அவர்கள் பெயரால் தண்ணீர்ப் பந்தல் நிறுவித் தருமம செய்தவர் அப்பூதி நாயனுர். தம் மூனறு புதலவர்களுககும், திரு நாவுக்கரசு சுவாமிகளின் திருநாமத் தையே சூட்டினுர். அந்த அப்பூதி யடிகளோ அந்தணச் சிரேஷ்டர். ஆனுல அவாக்குத் தெரிநதது சமய நெறி, சிவபக்தி, சிவபகதரிடம பக்தி. சாதிபபற்று தலையெடுக்கவில்லை அஙகே.

இப்படித்தான வைணவச சமயத் தினுள் புகுநது பாாக்கின், தாழ்த்தப் பட்ட பாணர் எனும குலத்துதித்த ஆழ்வாரை, அரங்கநாதப் பெரு மானே பணித்ததின பேரில், அநதண அர்ச்சகா ஆகிய லோக சாரங்க முனி வர்தம தோளில் - பாணரை எழுந்த ருளச செயது சந்நிதியில் கொணடு வநது இறக்கி விட்டார். திருப் பாணர் பனனிருவருள் எவர்க்கும் ஏற்றமோ-இறககமோ இலலாத நித் திய சூரிகளுள் ஒருவராகத் திகழ்கி ருர். இங்கேசாதி எங்கே வந்தது சமய நெறியைக் கடைப் பிடிப்போரிடம் இன்று பெருமாள் கூட வெறும் கருட வாகனராக உள்ளபோது, ஆழ்வார் முனிவாகனராக விளங்குகிருர்.

வைதீகச் சமயத்தில் அத்வைதம், விசிஷ்டாத்வைதம், த்வைதம் என்ற மூன்று உட்பிரிவுகள் காணகிறோம். முறையே சங்கரர், ராமானுஜர், மதவ ஆசாரியர்கள் காட்டிய மார்க்கங்கள் எனலாம். சங்கராச் சாரியர்கள, வைணவ ஜீயாகள், மத்வ ஆசாரியர்களா இவ்வழிகளை நடத்திச் செல்கிருர்கள். அவர்கள்

**வில்வதாசன்**

மூவரும் தனித்தனியே தத்தம் மர பிலே செல்பவர்கள் என்பதை நாம் அறிவோம். அவர்கள் மூவருமே கொண்டாடுவது அல்லது அனுஷ்டிப் பது எதுஎனில் சாதுர்மாசிய நோன்பு ஒன்றே எனலாம். அதன் ஆரமபம் வியாச பூஜை ஆகும். வேதங்களைத் தொகுத்துப் பிரம்ம சூத்ரம் படைத் துத் தந்தவர் வியாசர் பகவான். பராசராக்குச் சோதிடப்படி ஓர் உய ரிய நேரத்திலே சததியவதி எனும் பெண்மணிக்குப் பிறந்தவா அந்த கிருஷ்ண தவைபாயனர். அப்பெண் மணி மீனவரோடு வளர்நதவள. இதெல்லாம் மகாபாரதத்து ஆரம்பப் பகுதி. பரம வைதீக தர்மம் பேணும் மூன்று ஆசாரியர்களும் போயும் போயும் இந்த வியாசரை எங்கே பிடித்தார்கள் என்று எவருமே கேட் கிலர். காரணம் அவர்கள் மூவரை யும் இணைத்து வைப்பது வேதநெறி.

அம்மார்க்கத்திற்கு வியாசர் ஆற்றிய தொண்டு வேறு எவருமசெய்ய வில்லை.

வியாசர் செயத பாரதம, அவரது ஒரே இதிகாசம. பதினெண புரா ணங்களை வழஙகியவர் யார்? அதுவும வியாசரே. அவர் என்ன சாதி என்று சமய நெறியாளாகள் எவரும கேட்கவில்லை. பாரதம் எனறதும கூடவே தோனறும இனனொரு இதிகாசம இராமாயணம். எழுதியவர் வால்மீகி முனிவர். முனிவராவது, முன்னாள் காட்டு வழிப்பறி பேர்வழி. நாரதரால் தாக்கம ஏற்பட்டு இராமகாதை பாடியவர். வீடுதோறும பக்தியுடன் நித்திய பாராயணம் செய்பவர்கள, இராமர் திருப்பெயருக்கும் முன வாலமீகி மகரிஷியைக 'கூஜன்தம ராமராமேதி' எனறு தொடங்கும் சுலோகத்தினால கொணடாடிவிட்டுத தான் ராம காதையைப் படிபபாாகள.

இங்கெல்லாம சாதி பற்றிய எணணம் எவர்க்கேனும் வநததா?

வால்மீகி வேடா என்றதும், நம் கண எதிரே இனனொரு வேடுவா திலகம் தோன்றுவாா. அவா தாம் தம கணணை முக்கணணனுக்கே அர்ப்பணம் செய்த கணணப்பநாயனார் சுவாமிகள்.

அவரைச் சைவ சமயம் கொணடாடும. ஏனெனில் வேடுவராயினும், அவர் உண்மையான சிவ பக்தர். அறுபத்துமூவருள ஒருவராகப் போற்றபபடுபவா.

அவரைப் போய ஆதிசங்கரர் பாடுவானேன்? பகவத்பாதர் அத்வைத சிநதாந்தப் பிரவாததகா மட்டுமல்ல. பரம பகதா - பகவத் பாதர் (இறையடியாா). பகவானின மீது பகதிமிகுந்த துதிகள் நிறைய அருள்பவர். மக்களிடையே ஞானததைப பரபபினாற்போல, ஆழ்நத இறை நாட்டத்தையும் புகுத்த வநதவா.

இலலையேல, சிவானநதலஹரி நூலில் கணணப்பரின் பெயரைச் சொலவாரா? பக்தியினால் எனனெனன அறபுதஙகள் நடைபெறலாம எனபதை விளக்கும கலோகம 'மார்காவர்திதபாதுகா பசுபதே ரங்கஸய கூர்ச்சாயதே' எனத தொடங்கும். ஆதிசங்கரர் பரம வைதிக மார்க்கத்தில் வந்தவா. கண்ணப்பர் வைதீகம் எனில் என்ன என்றே அறியாதவர் எனலாம. எவ்வளவோ நூல்கள் எழுதியவா சஙகரர். எதிலும எந்த மனிதனையும் பாடவில்லை. பரமபொருள, இல்லையேல் கணபதி - முருகன் - சிவபெருமான - அம்பிகை - திருமால - மற்றும் கங்கை-யமுனை - இப்படித தெய்வங்களின மீதே பாடியவா. அவர் பாடிய ஒரே மனிதர் கண்ணப்பநாயனார் எனில், காரணம சுலோகமே சொல்கிறது — பக்தி செய்யும் பரமாத்புதம் அது! சங்கரரைக கணணப்பன் மீது பாட வைத்து பகதிநெறி-சமயநெறி. சாதி வருவது சமயநெறி குன்றும் போது தான். வாலமீகியையும் வியாசரையும் கணணப்பரையும் குகனையும் சபரியையும் போறறும சமய நெறி மலர்க; பக்திநெறி ஓங்குக; வேதவழி வளர்க!

*

## ஞானம

அகஙகாரம இருககும் வரையில அஞ்ஞானமும இருக்கிறது. இறைவா! நீயே கர்த்தா; நான உன கையில ஒரு கருவி என்று உணர்வது ஞானத்தின் விளைவாகும.

ಂ ಂ ಂ ಂ

உலகததவா போகங்களை அனுபவித்துப் பாாதது அவைகள் தீங்கு விளைவிப்பவைகள எனனும அருவருப்பு அவர்களுக்கு வரும்போது வைராக்கியமும வருகிறது.

—ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

## மனிதப் பிறவியின் மாண்பு

அரியது கேட்கின் வரிவடி வேலாய!
அரிது அரிது மானிடர் ஆதல அரிது!
மானிடர் ஆயினும் கூன் குருடு செவிடு
பேடு நீஙகிப் பிறத்தல் அரிது!
பேடு நீஙகிப பிறந்த காலையும
ஞானமும கல்வியும நயததல் அரிது!
ஞானமும கல்வியும் நயநத காலையும்
தானமும தவமும் தான செயல் அரிது!
தானமும தவமும தான செய்வர் ஆயினும
வானவர் நாடு வழி திறந்திடுமே. —ஔவையார்.

—திருமதி. கமலா மாரியப்பன், கோயமுததூர்.

# அருளிச் செயல் என்னும் தமிழ் வேதம்

உயர்வற உயர் நலம் உடையவன் எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனின் அனந்த கல்யாண குணங்களில் ஆழங்காற்பட்டு, அந்த பகவத் அநுபவம் உள்ளடங்காமல் பெருக்காறு போல ஆழ்வார்களிடமிருந்து வெளிப்பட்டவைதாம அருளிச் செயல் எனனும் தமிழ் வேதம். எம்பெருமான் திருவருளாலே மயர்வற மதி நலம அருளப்பட்டு வெளிவந்தவை ஆதலால அருளிச் செயல் எனப்படுகின்றது. இதுவே பிற்காலத்தில் ஸ்ரீமந் நாதமுனிகள் எனனும முதல் வைணவ ஆசாரியராலே தொகுக்கப பெற்று நாலாயிர திவ்வியப பிரபந்தம் எனவும் வழங்கப் பெறுகின்றது. எம்பெருமானின் அர்ச்சாவதார திருமேனியில் ஈடுபட்டு பாடப் பெற்றதால அர்ச்சாவதார வேதம எனவும் வழங்கப்பெறுகின்றது. வடமொழி வேதத்தைப் பயிலுவதில், ஸ்வரம் உச்சரிப்பு, அநுதாத்தம (மெல்லச் சொல்லுதல) உதாத்தம் (உரக்கச சொல்லுதல) முதலிய விதி முறைகள உள்ளன. மேலும் வடமொழி வேதம் அத்யயனம செய்வது (பாடம் செய்வது) மிகுந்த கடினம. ஆகவே பெண்ணும், பேதையரும மற்றும் யாவரும் கடைத்தேற வேண்டி ஆழ்வார்களின் வடமொழி வேதத்தின ஸாரத்தை தமிழ் வேதமாக அருளிச செய்துள்ளனா. அர்ச்சாவதார திருமேனியிலீடுபட்டு பாடியதால், ஸ்ரீ இராமநுசருடைய சீடரான ஸ்ரீ திருவரங்கத்தமுதனாரும தாம் இயற்றிய இராமாநுச நூற்றந்தாதியில் "நாரணனைக் காட்டிய வேதம களிப்புற்றது" எனவும "வாட்டமிலா வண்டமிழ் மறை வாழ்ந்தது" எனவும தமிழ் வேதத்தைச் சிறப்பித்து அருளிச செய்துள்ளார்.

ஸ்ரீ விஷ்ணு திருக்கோவில்களில் உற்சவ காலங்களில் வீதிப் புறப்பாடு சமயம் தமிழ் வேதம் எம்பெருமானுக்கு முன்பாகவும் வடமொழி வேதம் எம்பெருமானுக்கு பின்பாகவும் ஓதப்படுகிறது. நித்திய திருவாராதன காலங்களிலும், முக்கியமான பிரபந்தங்கள பாடப்பெறுகின்றன. இதை சைவ சமயாசாரியரான குமர குருபரஸ்வாமிகளும் "பழ மறைகள் முறையிட, பசுந்தமிழ் பின் சென்ற பசுங் கொண்டலே" என்று திருமாலைச் சிறப்பிக்கின்றார். கவிச சக்ரவர்த்தி கம்பரும் தம் சடகோப ரந்தாதியில் "அந்தமிலா மறையாயிரத்தாழ்ந்த அரும்பொருளைச் செந்தமிழாகத் திருத்திலனேல் (நம்மாழ்வார்) நிலத்தேவர்களும, தந்தம் விழாவும் அழகு மெனனும்" என்று பாடியுள்ளார். வடமொழி வேதத்தோடு தமிழ் வேதத்தையும் ஸ்ரீவைணவ அந்தணர்கள் கற்க வேண்டுமென்றும, பூர்வாச்சாரியர்கள விதித்துள்ளனர். இதை யொட்டியே ஸ்ரீ வைணவர்களின முகவரி எழுதும் பொழுது "ஸ்ரீ உ.வே" என்றுஎழுதப் பெறுகின்றது. ஸ்ரீ உ. வே. என்பது உபய வேதங்களையும் (தமிழ் வேதம், வடமொழி வேதம்) கற்றவர் என்பது பொருளாகும். இத்துணை பெருமைகள நிறைந்த தமிழ் வேதத்தை யாவரும் கற்றுக் கடைத்தேறுவோமாக. ✿

திரு. எஸ். திருமலை இராமஸ்வாமி,
திருவணை.

## விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதல கூடாது. அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம திருப்பதி' எனும பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத தகவல்களுடன கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில) அனுப்புதல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம, திருப்பதி.

(16-ஆம் பக்கத் தொடர்ச்சி)

களில நடைபெறும் அரையர் சேவை யில் இடம பெறும் பிரபநத வகை களைப் பின்பற்றுகின்றன; இனனுஞ் சில பக்தியிலக்கியக் கவிஞர்கள் பாடிய அகப்பொருள் அமைப்பில் உள்ளன. பாமர மககள் நாவில் நடமாடும் இலககிய வகை களில் ஏனைய பாடல்கள உள்ளன. தம காலத்தில சமூகததில் காணப் பட்ட சாதியமைப்பு, புறச்சடங்கு கள் இவற்றைத் தத்துவராயர் கடுமை யாகச் சாடுகின்றார். மெய்ப்பொருளை உணர்வதை வலியுறுத்துகின்றார். அத் துவைத வேதாந்தக் கருத்துககளைப் பாடும்போது குருவணக்கம், குரு பரம்பரையைப் பாடுதல் எனபதை மிகுதியும் போற்றுகிறார். தம்முடைய நேரடியான குரு (தமது மாமன) ஸவ ரூபானந்தர், குருவின குரு சிவப்பிர காசர் ஆகிய இருவரையும மிகுதி யும் பாடுவதுடன், குரு பரம்பரை யை (முதலாசாரியரான ஸ்ரீகைலா சத்தில் எழுந்தருளியுள்ள உமாமகேசு வரர் முதலாக வரும் குரு பரம்பரை) மிகுதியும் போற்றுகிறார். இது, முன் னமே ஆதிசங்கரரால் வடமொழி நூற்களிலும் தமிழில் சைவசிததாந்த நூற்களிலும வைணவ ஆசார்ய பரம பரையைப் போற்றும் இராமாநுசா உள்ளிட்ட பெரியவர்களின் நூறகளி லும் பரவலாகப் போற்றப்படும்நெறி யாகும். அதனைத் தத்துவராயர் பெரிதும போற்றுகிறார்.

மக்களிடையே இப்பாடல்களைப் பரப்ப இசைத்தனமை, ஆடல கூதது உள்ளிட்ட பாமர மக்களின பிரபந்த வகைகளை எடுததாளுந் தனமை, எளிய சொறகளில அமைநத தன்மை பயினறு வரும் உத்தி, வழககுச்சொற கள் ஆட்சி என்ற பல்வேறு உததி களைத் தத்துவராயர் எடுத்தாண்டுள் ளார்.

இந்நூற்றுண்டின தொடககம் வரை பாடுதுறையும் கைவல்ய நவ நீதமும் மக்களால பஜனைப் பாடல் களாகப் பாடப்பட்டன. இன்றள வும் தமிழ்நாட்டில் உள்ள வேதாந்த மடஙகளில் இப்பாடலகள பாடப் பட்டு வருகினறன. வேதாந்த நெறி என்று வரும்போதே சைவ—வைணவ பேதம் இன்றிச் சிவனையும் நாராயண னையும் பாடுவது மரபாகிறது. தத்து வராயர் பாடுதுறையில் பொதுவான இறைவனாகவும் சிவனாகவும் நாராய ணனாகவும் பாடுகின்றார். குருவையே இறைவனாகப் பாடுகினறார்.

தத்துவராயரின் பாடுதுறையில் உள்ள 138 தலைப்புககளில் உளள 130 பிரபநதங்களுக்கும் பெயரிடப் பட்டுள்ள அமைபபிலேயே இக்கட்டு ரையில் செயதிகள் விளக்கப்பெற் றன. இப்பெயரிடலைப் புலவரே செய்தாரா, அவரது மாணவர்கள் எழுதிககொணடு பின் தொகுத்த போது இட்டனரா எனபதறகு அகச் சானறு ஏதுமில்லை. பெயரிடல் - வகை பிரித்தல் பெருமபாலும பாட லின் ஈற்றில் வரும சொல்லைக்கொண் டும, பாடலில் வரும மாநதா, ஆடல் இசைக்கருவி எனபவற்றைககொண டும் செய்யப்பட்டுள்ளது. சானறாக, பிடாரரே எனறு ஈற்றுசசொல வரு மாயின அப்பிரபநதத்தின தலைப்பு பிடாரன் எனபதாக உளளது. அமமா னையிலும் வினா—விடை முறை உள் ளது. சாழலிலும உளளது; இரு பிறப்பாளா எனபதிலும இமமுறை உள்ளது. மூனறிலும முறையே ஈறறுசசொல அமமானை, சாழல், இரு பிறப்பாளா எனறு வருகினறன. எனவே, இவ்வாறு அடிதோறுமோ ஈற்றடியிலோ வரும் சொல்லை மட் டும் கொண்டு பிரபநதங்களை வகை செய்வது—அந்த வகைபாடு செய்த வர் மூலவரோ உறசவரோயாராயி னும் - ஏற்றதா எனற வினா எழுகி றது. யாபபு அடிப்படையில் பார்த் தால் இவை வேறு வகைகளைப பெறும். உததி முறையில்-விளிககும சொல முறையில் இவை இவவாறு பெயர் பெறறுளளன.

அததுவைத வேதாநதக கருததுக் களைப் பரப்ப இவ்வகைகளைத் ததது வராயர் ஏற்றுக்கொணடார். இப பிரபந்த வகைகள் அவர் காலத்தில் வாக்கில் இருநதனவா என்பதற்கான வேறு சான்றுகள் இல்லை எளிமை யும் இசைப்பணபும் காரணமாகவும் சமூகச்சாதியமைப்பைச்சாடுமபாங்கு காரணமாகவும் இவை மக்களால பாடப்பெற்றன. பக்தியியக்கம் வலியுறுத்திய வழிபாட்டு நெறியை யும் ஞான நெறியினர் போறறும தத் துவ நெறியையும் கலநது புது நெறியில் இவர் பாடினார். துறவு பூணடவர் மட்டுமே அடையக் கூடும் என்று போற்றபபெற்ற அத்துவைத வேதாநத நெறியை அனைவரும பெற லாம் என்று பாடினார். ஞான நெறியில் நடக்கும் சச்சரவு களை எதிர்த்து எந்நிலையிலும் முக்தி பெறலாம் என்று வலியுறுததினார். முகதி பெறுவதற்குப் புறச்சடங்கு கள், நம்பிககைகள, சினனஙகள் ஆகி யன தேவை இல்லை என்று வாதிட் டார். சமூக அமைப்பிலும சாதிப் பாகுபாடுகளைச் சாடினார். சஙகரரின அத்துவதை வேதாந்தக் கருத்துக் களைப் பரப்ப பழைய மரபு வழியி லான வகைகளையும் புதிய இலக்கிய வகைகளையும எடுததாணடார்.



# நம்மாழ்வாரும் அவர் செய்த உபதேசமும்

'சடகோபர்' என்பது ஸ்ரீ வைஷ்ணவ மதத்திற் சிறந்த மெய்யடியார்களென்று கொண்டாடப்படுகிற ஆழ்வார்கள் பன்னிருவரில் ஐந்தாமவரான நம்மாழ்வரது திருநாமங்களிலொன்று. பாண்டிய நாட்டில தாமிரபரணி நதிதீரத்திலுள்ளதான திருக்குருகூரில் வேளாள வருணத்தவராகிய திருவழுதி வளநாடரென்பவரது சந்ததியில் காரியெனபவாக்கு உடைய நங்கையாா திருவயிற்றில் திருவவதரித்த இவர் பிறநத பொழுதே தொடங்கி அழுதல் பால் குடித்தல் முதலிய குழந்தைச் செய்கையொன்றையும இல்லாமலே வாட்டமின்றிப் பரிபூர்ணராய் வளர்ந்து வருகிற ஆச்சரியத்தைத் தாய் தநதையர் கண்டு இவரை அத் திருப்பதியிலுள்ள திருமாலின் திருக்கோயிலிற் கொணடுபோய்விட இவர் அஙகிருந்த ஒரு புளியமரத்தின் கீழ்ச் சென்று வீற்றிருநது பதினறு பிராயமளவும் கண திறக்காமல மௌனமாக எழுநதருளியிருந்த பின்பு, மதுரகவிகள் இவவாழ்வாருடைய மகிமையையறிநது வநது அடைநது அடிமைத் தொழில் செய்துவருகையில ஆழ்வாா இருக்கு, யசுர், அதர்வணம், சாமம் என்ற நான்கு வேதஙகளின சாரார்த்தங்களை முறையே அமையத் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவநதாதி, திருவாய மொழியென்றும நான்கு பிரபந்தங்களை அருளிச்செய்து உலகத்தை உய்வித்தனரென்று வரலாறறின சுருககம் அறிக.

கர்பத்திலிருககின்ற பொழுது ஞானமுடையனவாயிருக்கின்ற குழந்தைகளைப் பிறந்தவுடனே தனது ஸபரிசத்தால் அஜ்ஞானத்துககு உள்ளாக்கி அழுதல் அரற்றுதல் முதலியன செய்யும்படி பண்ணிவிடும் தனமையதான சடமென்னும் வாயு, இவ்வாழ்வார் அவதரித்த பொழுது இவரையும் தொடுதற்கு வர, அப்பொழுது இவர் அதனை உங்காரத்தால் ஒருத்து ஓட்டியொழித்ததனால், சடகோபா என்று இவர் நாமமாயிற்று; எம்பெருமானுடைய திவ்ய மங்கள குணஙகளாகிய அமுத வெள்ளத்திலே முழுகி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திருப்பவராதல் பற்றி 'ஆழ்வார்கள்' என்று பெயர் பெற்ற பரமபாகவதர்களில் இவர் பிரதானராதலால் 'ஆழ்வார்' என்பது இவர்க்குச் சிறப்புப் பெயராக வழங்கும். மாறன், பராங்குசன, வகுளாபரணன், திருவீறுடையபிரான், திருக்குருகூர் நம்பி, குருகைப்பிரான முதலிய திருநாமஙகளும் இவர்க்கு உண்டு.

நம சடகோபனைப் பாடினையோ வென்று நம்பெருமாள் வினவிய ஆதரத்தாற்கேட்ட விவரம் கம்பன் வரலாறறிற்கூறப் பட்டிருக்கிறது. சடகோபர் நம்பெருமானால் 'நம் ஆழ்வார்' என்று அபிமானித்து விசேஷ கடாக்ஷஞ் செய்யப்பட்டு மற்றையாழ்வார்களைவிரினும் உயர்வு பெற்றதனால் 'நம் ஆழ்வார்' என்று பெயர் பெற்றனா. 'நம் பெருமாள்' என்ற பெயரும் உயர்ச்சியை விளககும். "நம்பெருமாள, நமஆழ்வார், நஞ்சீயர், நம்பிள்ளை யெனபரவாதம் ஏற்றத்தால்" எனற உபதேச ரததினமாலையை காணக.

வீடு பெறுதற்குச் சாதகமாக ஓதப படுகிற கர்மம் ஞானம் முதலியவற்றை மறந்து எம்பெருமானை சரணமடைதலாகிய பிரபத்தியொனறே முத்திக்கு நேரான உபாயம் என்று தாபித்தனர் நம்மாழ்வார். ஆழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தஙகளிலுள்ள ஒவ்வொரு செய்யுளின் ஒவ்வோர் அடியும் ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்ய ஸ்வரூபத்தை ஐயந்திரிபற நன்குணர்ந்து தெளிவாக வெளியிடுவதால் அப்பரமன் அதனைக் கடந்து செல்லமாட்டாது அதனுள்ளே அடங்கி நிற்பன்.

பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை நாடிச் சொல்லிக் கொண்டே சென்ற வேதம் அதன் முடிவு தனக்கு எட்டாமையால் மீண்டதென்பது அவ்வேதஞ்சொல்வதனாலேயே தெரிகிறது. ஆகவே, 'வேதத்தின் முன் செல்க' என்றது அமையும்; கோயில்


**திரு எஸ். கே. இராமானுஜாச்சாரி, B.A., L.T.**
**சென்னை-32.**


களில் உத்ஸவம் கண்டருளுகிற பொழுது எம்பெருமான் நடுவே எழுந்தருள, வடமொழி வேதம் அவனை எட்டமாட்டாது நாடித் தொடர்ந்து செல்லுதற்கு அறிகுறியாக எம்பெருமானுக்குப் பின்னே பாராயணம் செய்யப்பட்டு வருதலும், தமிழ் வேதமாகிய திவ்யப்பிரபந்தம் அவனது சொரூபத்தையுணர்ந்து முன் செலலுதல் தோன்ற முன்னே ஓதப்படுதலும் காண்க. கடல் கடைந்து அமுதமெடுப்பாா போல், அளவிறந்த வேதஙகளின அநதமாய் உணர்தற்கு அரியனவாயுள்ள உபநிஷததுக்களைப் பலபடியால் ஆய்ந்துணர்ந்து பரவஸ்து நிர்ணயஞ் செயயப்புகுவாாக்கு, ஆழ்வார் அருளிச் செயல்கள் மூலமாக 'கண்ணனல்லால் தெயவமில்லை' 'அத்தெய்வ நாயகன் தானே' என்று ஐயந்திரிபுறந் தெளியச் சொல்லி பரம்பொருளைப் பிடித்துக் காட்டிக் கொடுத்தார். ஆழ்வார் அருளிச் செயலாகிய தென்

மொழி வேதம், பிறப்பை யொழிக்க விரும்புவர்களான முமுக்ஷுக்கள் முக்தியடைவதற்கு ஒரு முக்கிய சாதனம். திருவாய்மொழியாகிய திராவிடவேதம் இந்த உலகத்திற்குத் தாயாகிய ஸ்ரீமந்நாராயணனால் பிரமனுக்கு உபதேசிக்கப்பட்டு வந்த கீர்வாண வேதமென்றே சொல்லலாம். எவ்வாற்றாலும உணர்தற்கரிய பகவானுடைய சொரூபத்தை ஆழ்வார் தெளிவாக உணர்த்தி விளக்கி எளிதிற்காட்டியருளினமையாகிய பேருதவிக்கு உலகத்தவரனைவரும் கடமைப்பட்டிருக்கவும், பெருமபாலார் அதனை உணர்ந்து அவர் திறத்தில் வழிபாடு செய்யவேண்டும்.

நம்மாழ்வார் செய்தருளின உபகாரத்தின் வைபவத்தைப் பாராட்டி ஸ்ரீ மதுரகவிகள்,

"அருள கொண்டாடும அடியவரின்புற
அருளினனவ்வருமறையின் பொருள்,
அருள் கொண்டாயிரமின் தமிழ்
பாடினன்
அருள் கண்டீர்வ்வுலகினில் மிக்கதே"

என்று அருளிச் செய்திருத்தல நோககத்தககது. ஆழ்வார் அவதாரத்துககுப்பிற்காலத்தார் பலரும் அவா பிரபந்தங்களினுற் பிறப்பு வீடுகளையும அவற்றின் காரணங்களையும விபரீதஐயங்களால் அன்றி உணமையால உணரலாயினர். அத்திவ்யப்ரபநதங்கள் தமமைக கற்பார் யாவர்ககுந தததுவ ஞானேதயத்துககுக் காரணமாகுந திறமையுடையது.

ஜீவான்மாககள் கரும வசத்திலேயே கிடந்து பிறப்புத்துனபங்கட்கு உள்ளாகி உழலாது மீண்டுவினை தொலைத்துப் பிறப்பற்றுப் பரம பதமடையும்படியான பாககியம பெறுமாறு செய்யவல்ல இறைவர் நம்மாழ்வார். பகவத் விரோதியான கலியுகததன்மை போய்க் கிருதயுகத் தன்மையான வைஷ்ணவ தர்மமே எங்கும் நடக்கும்படி ஆழ்வார் தமது உபதேசத்தாலே உலகில திருந்தாதார் தம்மை திருத்தியருளினராதலால் 'கலியின சினம் பாழ்படுத்த பிரான்' என்ற திருநாமம அவர்க்கு வந்தது. நம் ஆழ்வாரோ எம்பெருமானுக்கு நிரந்தர கைங்கரியஞ் செய்து தாம் வீடு பெற்று உய்ந்ததுமனறி தமது உபதேசத்தால் பிறரும வீடுபெற்று உய்யுமாறு மோக்ஷமாலையெனறு ஒரு பெயர் பெறத்தக்க திருவாய்மொழியை அருளிச் செய்தனராதலால் இவர் பிரம்மருத்ராதி தேவாகளுக்கும மேம்படடவரெனறு கருத்து.

வேதத்தின் முறபகுதியாகிய கர்மகாணடத்தை முக்கியமாகக் கொணடு அதனபடி தவமும் வேள்வியும் செய்பவர்களை நோககி, 'அலை அழியுமியல் பினவான சுவர்க்கம் முதலிய காமிய பலன்களைத் தருவனவாய் முகதிக்கு நேரே பரணமாகமையாலும் சிரமசாத்தியமாயிருத்ததாலும் சிறநத மார்கமாகா; திருக்குருகூரில அவதரித்து லோகோபகாரமாய் தத்வார்த்தங்களை வெளியிட்டுத் தமது அடியார்கள் இனியொரு பிறப்பினறி முத்தியைப் பெறுமாறு அருள செய்த பொயயில் புலவராகிய நம்மாழ்வாருடைய அருளிச் செயல்களைக் கேட்டும் ஓதியும் உணர்ந்து அநதமிலின்பத்து அழிவில் வீட்டை எளிதிற் பெறலாம்.

"காயோடு நீடுகனியுண்டு வீசு கடுங்கால
நுகர்ந்து நெடுங்காலமைந்து
தீயோடு நினறு தவஞ்செய்ய வேண்டா
திருமார்பனைச சிந்தை யுள்வைத்து
மென்பீர்"

என்று திருமங்கையாழ்வாா திருவாய் மலர்ந்து அருளியதும காணக.

கீர்த்தி பெற்ற மதுரகவிகள முதலிய உணமைப் புலவர்கள் வணங்கி வழிபடப பெற்ற பரமாசாரியரும- வேத விதிமுறை தவறாது நிகழும வேள்விகளும் அவற்றின் பயனாகும பருவ மழை பெருககும் பாணடிய நாட்டில் திருவதரித்தவருமாகிய நமமாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிப் பாசுரஙகளை நாம இடையறாது சிந்தித்து வநதால் இனி நமமை பிரமன் வினைவசமாக ஆயுளைக கற்பித்து இவ்வுலகத்திலே பல வகை பிறப்புககளில் இட்டு வைக்க முடியாது.

'மாதவன பாற்சடகோபன தீதவ
மின்றி யுரைதத
ஏதமிலாயரத்திப்பதது ஒத வலலார்
பிறவாரே',

"குருகூா சடகோபன நோநத
ஒதமிலாயிரததிப்பதது
அருவினை நீறு செய்யுமே"

எனறு ஆழ்வார் தாமே திருவாய்மொழியின் பயனை அருளிச் செய்தபடி அதனை அனுஸந்தானஞ்செய்வார்வினையனைத்துந்தொலைந்து பிறப்பற்று வீடு பெறுதல் நிச்சயம்.

### உணர்ச்சி

உன் உணர்சசிகளுக்கு அடிமை ஆகிவிடாதே. அவற்றை அடககி ஆள். அவை உன்னை ஆளவிடாதே. தன உணர்ச்சிகளை அடக்கியவனுக்கே மன சாநதி உண்டாகும். அவனே உணமையில் பலவான.

### மாயை

மரணம் மறைமுகமாக இருந்து இரவும் பகலுமாக உன்னைத்தாக்கிய வண்ணமாகவே இருக்கிறது. எனினும் நீ சாசுவதமாக இவ்வுலகில் இருககப்போவதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். இதுதான் மாயை.

—ஸவாமி சிவானந்தா.

— திருமதி. கமலா மாரியப்பன்-கோயமுத்தூர்.

# பிரபந்தம் நாட்டிற்கு வந்த வரலாறு

ஸைசவம போலவே வைணவமும் பௌததா ஜைனர்களின தாககுதலுககு உடபட நோநதது. இதனே, தடுககும வகையில் ஸ்ரீ ராமாநுசர் அவதாரம் செயது பிற மதத்தினரை வாதில் வென்று வைணவத்தை நிலே நாட்டினர்.

ஸ்ரீமந் நாதமுனிகள் ஆழ்வார்கள் பாடிய பாடல்களேத் தொகுத்தவா ஆவாா. இவா யோகியாக இருந்து பக்தி மாாககத்தில் தம்மை ஈடுபடுத்திக் கொணடவர். ஆசாரிய பரம்பரையில் இவரும் சிறநத ஆசாரியா. யோகவிததையின் இரகசியஙகளே அறிநததுமனறி மறறும் சங்கீதக கலேகளேயும் அறிந்து மக்களிடையே தெய்வ உணாசசிகளே எழுப்பினர். தேவகானத்தில் பிரபந்தங்களேப் பாடி உலகிறகு உணர்த்தியவர்.

ஸ்ரீமந் நாதமுனிகளின் இருபபிடமான வீர நாராயணபுரத்திற்கு (காநாடக மாநிலம) ஒரு சமயம் யாததிரையாக வநத சில பகதர்கள அவ வூர்க்கோயிலில் நம்மாழவார் அருளிச செய்த "ஆரா அமுதே" என்கிற பதிகத்தை மிகுந்த அனுபவ ரசத்துடன பாடினாகள். அநத இன்னிசையில உள்ளம உருகி பரமானநதமடைநது அவர்களே நோக்கி "நீங்கள ஓதிய பாசுரஙகளுள் ஈறறுப் பாசுரததில "ஆயிரத்துள் இப்பத்தும்" எனக் காணப்படுதலின இப் பாசுரங்கள ஆயிரம் கொணட பிரபந்தம் என்று புலனுகிறது. அப்பிரபந்தம் யாவும் உங்களுககு வருமோ" என்று வினவ, "எங்களுக்கு இம்மட்டும் தெரியுமெனறு" கூறினர்கள்.

பிறகு ஸ்ரீமந் நாதமுனிகள் அவர்கள மூலம் நம்மாழ்வார் அவதரித்த திருக்குருகூர் (தமிழகம்) எனகிற ஸ்தலத்துக்கு சென்ருர். அங்கு ஆழ்வார் யோக சமாதியில இருக்கக் கணடு ஸ்ரீ மதுரகவிகளே அணுகினர். ஸ்ரீ மதுரகவிகள் ஆழவாரைப்பறறி பாடியதும, பதினெரு பாசுரங்களேக் கொணடதும் ஆகிய "கண்ணி நுண சிறுத் தாம்பு" என்கிற பிரபந்தத்தை பன்னீராயிரம் முறை உருப்போடுகிறவாகளுக்குமுன் ஆழ்வார் தோன்றியருளுவார் எனறு உரைத்தருளினர். அதன்படி ஸ்ரீமந் நாதமுனிகள், திருபபுளியாழ்வார் அடியில எழுந்தருளியிருந்த நமமாழ்வார் முனனிலேயில், பனனீராயிரம முறை "கணணிநுண சிறுத்தாம்பு" உருசெபித்தார். அவா முன் ஞானதேசிகராகிய ஆழ்வாா தோன்றி, துதித்துக் கொணடிருப்பதற்குக் காரணம் யாது என்று கேட்டருளினர்.

ஸ்ரீமந் நாதமுனிகள எழுநது வணஙகி நினறு,

"எந்தையீா ! தேவரீர் அருளிச்
செயலேப பெற வேண்டும் எனனும
விருப்பம்"

எனறனர்.

நமமாழவார் அருள்கூர்நது தமது அருளிச் செயல்களாடு மற்ற ஏனேய ஆழ்வாாகள் அருளிச செய்த பிரபந்தங்களேயும், திருமந்திரங்களேயும் திருவாய் மலர்ந்தருளினர்.

ஸ்ரீமந நாதமுனிகள் வீர நாராயணபுரத்திற்கு எழுநதருளி, பெருமாள் முன்பு நாலாயிரத்தையும் விண்ணப்பம் செயதார். 'இந்த நாலாயிரம பாசுரங்களே உலகிற்கு தெரியும் வண்ணம பண்ணிசைத் தாளங்களே அமைத்துப் பாடும்' எனறு ஆகாசவாணி எழுநதது. அவரும் அப்படியே (1) முதலாயிரம் (2) பெரிய திருமொழி (3) திருவாய்மொழி (4) இயற்பா எனறு பாகுபடுத்தி அவற்றிற்கு ஏற்றவாறு தாளங்களே அமைத்து தேவகானத்தில் பாடி அபிநயிககும்படி நியமித்தருளினர்.

வேதம் விரிவானது. அதன் பொருள் எளிதில் உணர்தல் அரிது. வேதத்தின் பொருளே யாவரும் உணரும்படி ஆழ்வார்கள அழகிய தமிழில் செவிககினிய செஞ் சொற்களால் நாலாயிரம் பாசுரங்களே அருளிச் செயதிருக்கிருாகள.

திரு. எம். என. திருமலய்யா,
சேலம.

நல்ல இசையிலும் நாட்டியத்திலும் மிகவும் வல்லவளான ஒரு தேவ தாசியிடம் ராகம் தாளம் இசை ஆகியவற்றை ஸ்ரீமந் நாதமுனிகள் பயின்று உலகிற்கு அளித்தார் எனபது வரலாறு.

ஆலயஙகளே மையமாக வைததும ஆழ்வார்களேயும், ஆசாரியர்களேயும், பின்பற்றியும் நம் சமுதாய வாழ்வில பல சீர்திருத்தங்களேச செய்தவா ஸ்ரீ ராமாநுசர். இவர் 11ம் நூறறுணடில் வாழ்ந்தவர். திராவிட வேத நெறிகளே வகுத்து வைஷ்ணவ திருத்தலங்களில் திவ்யப்பிரபந்தத்திற்கு முதலிடம் தந்து வளர்த்தவர்.

ஆழ்வாா திருவடிகளே சரணம்.

(1?-ம் பக்கத் தொடர்ச்சி)

எனவே புராணங்களைப் பொறுத்த வரை இவ்வணுகு முறை மிகத் மிகத் தேவை என்பது புலனாகிறது. இதை மகாகவி பாரதியார் இப்படிக் கூறுகிறார் :

"நன்று புராணங்கள் செய்தார்—
அதில்
நல்ல கவிதை பலபல தந்தார்
கவிதை மிக நல்லதேனும்—அக
கதைகள் பொய்யென்று தெளிவுறக்
கண்டோம்
புவிதனில் வாழ்நெறி காட்டி—
நம்மைப்
போதிக்கும் கட்டுக் கதைகள் அவை
தாம"

(உயிர் பெற்ற தமிழர் பாட்டு)

அரிச்சந்திர புராண நாடகத்தைக் கண்ட காந்தியடிகள் அக்கதையைப் பிரதானமாகக் கொண்டிருப்பாரானால், அதைக் கண்டு ஆனந்தப் படுவதோடு நின்றிருப்பார். ஆனால், அக்கதையில் வரும் அரிச்சந்திரன் எத்துணைத்துயர் வந்தபோதும் சத்தியமே பேசுவதைக் கண்ட அவர் மனதில், 'சத்தியமே வெல்லும், எத்துணைத் துயர் வந்தபோதும் சத்தியமே பேச வேண்டும்' என்ற கருத்து ஆழப் பதிந்தது. அதனால் அவரும் சத்தியமே பேசி உலகம் போற்றும் ஒரு சத்தியவானாகத் திகழ்ந்தார்.

கதையை விட்டுக் கருத்தைப் பற்றும் இந்த அணுகு முறைதான் புராணங்களை அணுகும் உண்மையான—சரியான அணுகு முறையாகும்.

ஆனால், கருத்தை விட்டுக் கதையை மட்டும் பற்றும்போதே, 'கதைகள் நம்பும்படியாக இல்லையே! கதை முழுவதும் ஒரே புளுகு! ஒரே புளுகு!" என்பன போன்ற விமர்சனங்களுக்கெல்லாம் புராணங்கள் ஆளாகின்றன.

மேற்சொன்ன அணுகு முறையோடு புராணங்களை அணுகியவர்கள் அப்புராணங்களைப்பற்றித் தந்துள்ள மதிப்பீடுகள் வருமாறு :

1. புராணங்களை வேதத்தோடு இணைய வைத்துப் பேசுவர் உபநிடத ஆசிரியர்கள். அவர்கள் புராணங்களை 'ஐந்தாம் வேதம்' என்றே குறிப்பிடுவர்.

2. சிறந்த சமய தத்துவ உணர்வையும், நிறைந்த அருளனுபவத்தையும் தருபனவற்றுள் புராணங்கள் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன என்று கருதுகிறார் அருணந்தி சிவாச்சாரியார். எனவே அவர் அப்புராணங்களைச் "சிறப்புடைய புராணங்கள்" என்று போற்றினார்.

"புறச்சமய நெறி நின்று மகச் சமயம்
புக்கும
புகள் மிருதி வழியுழன்றும்
புகலுமாச்சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்
தவங்கள் புரிந்தும
அருங்கலைகள் பல தெரிந்து
மாரணங்கள் படித்தும்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும்
வேத
சிரப் பொருளை மிகத் தெளிந்துஞ்
சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா
யோகஞ்
செலுத்திய பின ஞானத்தாற்
சிவனடியைச் சேர்வர்"

(சிவஞான சித்தியார், பக்கம், 263)

3. "இந்தியப் புராணங்கள் செழுத்தோங்கிப் பரந்து விரிந்து, சிறந்த அழகுடனும், நிறைந்த பொருள் வளத்துடனும் மிளிர்கின்றன. அவைகளை நாம் உணர உணர அவற்றின் ஒளிமிக்கக் கனவுகளும் உயரிய இனிய கற்பனைகளும் நம் முன்னோர்க்கு வியப்பும் விம்மிதமும் விளைவித்து அவற்றிற்கு அழகிய உருவம் கொடுத்த நம் முன்னோர்களின் நுண்மாண் நுழை புலத்தினை வெளிப்படுத்துகின்றன"—என்பது புராணங்களைப்பற்றிய நேரு பெருமானின் மதிப்புரை.

4. இந்தியப் புராணங்களை ஆராய்ந்த மேலை நாட்டறிஞர் மாக்ஸ் முல்லர் அவற்றை, "இந்திய நாட்டுப் புனிதப் புத்தகங்கள்" என்று புகழ்ந்துள்ளார்.

தமிழ்த் தலபுராணங்களை ஆராய்ந்த டேவிட் டீன் ஷுல்மன் என்பவர் அவற்றைப்பற்றித் தந்துள்ள மதிப்பீடு வருமாறு :

"பொதுவாக இந்து சமயக் கருத்தோட்டத்தில் உள்ளது போலவே தமிழ்ப் புராணங்களும் அனைத்தின் படைப்பிலேயே தீமை நீக்க மற இணைந்து கிடப்பதைக் குறிப்பிடுகின்றன. இறப்பும், குற்றம், அளவு கடந்த துன்புறுத்தல் போன்றவை உட்படப் பல்வேறு வகையினதாக உள்ள தீமையே மிகவும் செயல் வேகம் உடையதாகவும் உயிராக்கம் தருவதாகவும் உள்ளது. குழப்பமயமாக உள்ள வாழ்க்கைப் போராட்ட இருளிலிருந்தும் கொடுமைகளிலிருந்தும் எதிர் நீச்சலடித்துக் கரையேறுவதிலேதான் வாழ்க்கையின் வெற்றி அடங்கியுள்ளது. சமுதாய வாழ்க்கைச் சந்தையில் கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பது போன்ற நம்பிக்கைகளே புராணங்களில் குறிப்பீடுகளாக, வேள்விகளையும் சமயச் சடங்குகளையும், இறை வழிபாட்டு நிகழ்ச்சிகளையும் சார்ந்தும் சூழ்ந்தும் உள்ள நம்பிக்கைகளின் சங்கிலித் தொடர்களாக வருகின்றன"

புராணங்களைப்பற்றிய இதுவும் இது போன்ற மதிப்பீடுகளும் அப்புராணங்களின் அருமை பெருமைகளையும் அவற்றின் இன்றியமையாமையையும் பறை சாற்றுவனவாக உள்ளன.

புராணங்கள் நீண்ட நெடிய பாரம்பரியம் மிக்கதொரு சமுதாயத்தின் உயரிய—உன்னத சொத்துக்கள். நேற்றுத் தலையெடுத்த பண்பாட்டிற்கு இந்த வளம் இருக்க இடமில்லை. எனவே சரியான அணுகு முறையோடு அணுகினால் அவை நம் பெருமைக்குரியவை; நம்மால் போற்றிப் பாதுகாக்கத் தக்கவை என்பது புலனாகும். ஆனால், அவை பயன்படக்கூடிய அளவிலேயே இடம் பெற வேண்டும். அவற்றை, நம் முன்னேற்றத்திற்குத் தடைகற்களாக வைத்துவிடக் கூடாது; படிக்கற்களாக அமைக்க வேண்டும். இதிலே தவறோ, தடுமாற்றமோ ஏற்படுமானால், அது சமுதாயத்தின் தவறாகத்தான் இருக்கும்; சமுதாயத்தின் தடுமாற்றமாகத்தான் இருக்கும். அதற்குப் புராணங்கள் பொறுப்பல்ல. ★

# திருவாணை கூறத் திரியும் மலை

ஆழ்வார்கள் அனைவரும பகவானுடைய ரூப, குண, விபவங்களில் ஆழங்கால் பட்டு அனுபவித்தனர். ஆனுல் விஷ்ணுசித்தரோ, பகவானுக்கு என்ன தீங்கு வருகிறதோ என்று பயந்து, ஸ்தானமில்லாத இடத்தில் பயந்து (அஸ்தானே பய சங்கி) இறைவனுக்கு ஒரு தீங்கும் நேரக்கூடாது என நெஞ்சு நீர் பண்டமாக்கி (ஐஸ் கட்டியாக்கி) பல்லாண்டு பாடினுர். இதனுல் இவருக்கு பெரியாழ்வார் என திருநாமம் உண்டாயிற்று. இவர் தன திருமொழியில் விபவ அவதாரத்தில் இறைவன் தோன்றியபோது, அன்று தானிருந்து பாட முடியாத கால, தேசங்களை நினைத்து அவைகளை அர்ச்சாவதாரத் திலே கண்டு பாடிய ஒரு பாசுரம்.

திரு. ஜி. இலட்சுமணன், M.A., B.Ed.,
சேடப்பாளையம்.

ஒரு வாரணம் பணி கொண்டவன்
பொய்கையில் கஞ்சன் தன்
ஒரு வாரணம் உயிருண்டவன், சென்
றுறையும் மலை
கரு வாரணம் தன் பிடி துறந்தோட
கடல் வண்ணன்
திரு வாணை கூறத் திரியும் தண்
மாலிருஞ் சோலையே ”

(வாரணம் – யானை; பொய்கை– குளம்: கஞ்சன்–கம்சன்; கருவாரணம்–கருமை நிறயானை; பிடி–பெண் யானை; வாணை–சத்தியம்.)

1. பொய்கையில் ஒரு வாரணம் பணி கொண்டவன் :

‘இந்திரத்யும்நன்’ என்ற அரசன் விஷ்ணு பக்தி நிறைந்தவனுய், தினமும் விஷ்ணுவே த்யானித்துக் கொண்டு, த்யானத்திலிருக்கும்போது அரசனிடம் அகஸ்தியர் வந்தார். அரசன் த்யானத்தில் இருந்ததால், அகஸ்தியரை கவனிக்காமல், கொஞ்சம் அலட்சியமாய் இருந்துவிட்டான். இதைக் கண்ட அகஸ்தியர் கோபம் கொண்டு, “நீ யானையைப்போல கர்வம் கொண்டு இருந்ததால், நீ யானையாகப் பிறக்கக்கடவாய்” என்று சாபமிட்டார். அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினுன். முன் பிறவியில் விஷ்ணுவை ஆராதித்ததால் அந்த பூர்வ ஜன்ம வாசனையால் இப்பிறவியிலும் நாள்தோறும் பொய்கைக்குச சென்று ஆயிரந் தாமரை மலர்களைக் கொண்டு திருமாலை வணங்கி வழிபட்டது.

‘தேவலன்’ என்ற முனிவர் நீருக்குள் நின்று தவம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ‘ஹூஹூ’ என்ற பெருடைய கந்தருவன, அநத தடாகத்தில் அழகைக் கண்டு மகிழ்ந்து, நீருக்குள் ஆனந்தமாக விளையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது அந்த நீருக்குள் தவம் செய்து கொண்டிருந்த முனிவரின் காலை விளையாட்டாகப்பிடித்துஇழுத்தான். இதனுல் கோபம் கொண்ட முனிவா, அந்த கந்தருவனை ‘முதலை’ யாகச் சபித்துவிட்டார். அவ்வாறே அந்தப் பொய்கையில் ‘ஹூஹூ’ என்ற கந்தருவன் முதலையாகப் பிறந்தான.

ஆயிரம் தாமரை இதழ்களால் வணங்கி வந்த யானையின் காலை இந்த முதலை கவ்விக்கொள்ள யானைக்கும் முதலைககும் நெடுநாள்வரை போர் நடந்தன. யானை கடைசியில் உயிர் நீங்கும்தருவாயில் “ஆதிமூலமே, என் கையிலுள்ள மலரை ஏற்றுக் கொள்வாயாக” என்று கதற, திருமால் பொய்கையின் கரைக்கு வந்து, யானையின் விரோதியான முதலையை ஆழிப் படையால் கொன்று, அதன் கையில் உள்ள பூவை ஏற்றுன் என்பதைத் தான் பெரியாழ்வார் உயிருக்கு மன்றுடிய யானையின் உயிரை மீட்டு, அதன் கைங்கர்யத்தையும் உகந்து ஏற்றுக்கொண்டான் என்கிறுர் முதல் வரிசையில்.

கஞ்சன் தன் ஒரு வாரணம் உயிர் உண்டவன் :

கஞ்சனுன கம்சன் கிருஷ்ண, பலராமர்களை கொல்வதற்காக ‘வில் விழா’ என்ற ஓர் விழா ஏற்பாடு செய்தான். அந்த விழாவிற்கு கிருஷ்ண, பலராமர்களை வர வேண்டும் என்று அழைப்பு அனுப்பப்பட்டது. அதன்படி கிருஷ்ணனும், பலராமனும் வடமதுரைக்கு வந்தனர். அவர்களைக் கொல்வதற்கு ‘குவலயாபீடம்’ என்ற வாரணத்தை மதம் பிடிக்கச் செய்து, அரண்மனை வாயிலில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. கிருஷ்ணன், பலராமர்கள் வருவதைக் கண்டு யானைப்பாகன் அவர்கள்மீது யானையை ஏவினுன். அந்த வாரணம் அவர்களிடத்தில் வந்து போர் செய்தது. வாரணத்தின் இரு தந்தங்களைச் சேற்றிலுள்ள கிழங்கைப் பிடுங்குவது போல இரு தந்தங்களையும் பிடுங்கி, அந்த தந்தத்தைக் கொண்டே யானையின் உயிரைப் போக்கினுர்கள். இதைப் பெரியாழ்வார், தகாத இடத்தில் சேர்ந்த வாரணத்தின் உயிரைப் போக்கினுன் என்கிறுர் இரண்டாம் வரியில்.

ஒரு வாரணம் தன் பிடி துறந்தோட :

திருமாலிருஞ்சோலைமலையில், கருமை நிறமுடைய ஆண் யானையும் பெண் யானையும் இனிமையாக மாலைப் பொழுதைக் கழித்தன. இரவுக்காலம் நெருங்கும்போது ஆண் யானை, பெண்

யானைக்கு உணவு தேடச் சென்றது. இரவு முழுவதும் வரவில்லை. காலையில் ஆண் யானை திரும்பி வருவதைக் கண்ட பெண் யானை கோபம் கொண்டு ஆண் யானையை விட்டு பெண் யானை ஓட ஆரம்பித்துவிட்டது.

கடல் வண்ணன் திருவாணை கூறத்
திரியும் தண் மாலிருஞ்சோலையே :

இவ்வாறு ஓட ஆரம்பித்த பெண் யானையைப் பார்த்து, ஆண் யானைக் "குளிர்ச்சி பொருந்திய திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியுள்ள கடல் நிறம் போன்ற அழகர் மீது ஆணை இட்டுச் சொல்லுகிறேன்" என்று கூற, மறுபடியும் பிடிஓட ஆரம்பித்தது. மறுபடியும் ஆண்யானை "குளிர்ச்சி பொருந்திய திருமாலிருஞ்சோலை மலையிலுள்ள பிராட்டியான 'சுந்தரவல்லி நாச்சியார்' மீது ஆணையாகக் கூறுகிறேன்" என்று கூறிய உடனே, பெண் யானை ஓடுவதை நிறுத்திவிட்டு, ஆண் யானையை நோக்க, பின் ஆண் யானையும், பெண் யானையும் இன்பமாக சேர்ந்து அந்த திருமலையில் திரிந்து விளையாடி மகிழ்கின்றன என்கிறார் பெரியாழ்வார்.

ஒரு வாரணத்தின் உயிரை பொய்கையில் மீட்டு, அதன் கைங்கர்யத்தைப் பெற்றுக் கொண்டான். ஒரு வாரணம் தகாத இடத்தில் சேர்ந்ததால், அதன் உயிரையே கொன்றுவிட்டான். அவன் இருக்கும் திருமலையில் யானைகளுக்கு ஏற்படும் துன்பத்தை இறைவன் திருநாமத்தைச் சொல்லி தீர்த்துக் கொண்டு இன்பமாக வாழ்க்கை நடத்துகின்றது என்கிறார் பெரியாழ்வார்.

வாரணமாகியயானையின் இனத்தை வைத்துஒருதத்துவத்தைவிளக்குகிறார் உயிருக்கு மன்றாடிய யானையை காப்பாற்றிக்காட்சித் தந்தார் என்பதால் இறைவன் அடியவர்களைக் காப்பாற்றி ரட்சித்தேதீருவானஎன்பதைக்காட்டுவதோடு, ரிஷிகளாலல் ஏற்பட்ட சாபத்தைக் கூட யானைபோன்ற பாகவதர்களின் திருவடி பலத்தால் நீங்கிவிடுகிறது என்பதைக் காட்டுகிறது.

கண்ணன் கீதையில், 'துஷ்கருதாம விநாஸாய' என்றதால் துஷ்டர்களை அழித்தே தீருவேன் என்பதற்குச் சேர குவலயாபீடம் என்ற யானை தகாத இடத்தில் சேர்ந்ததால் அதை அழித்தான் என்பதை விளக்குகிறது.

இரு யானைகள் இறைவன் வாழுமிடத்தில் தானும் வாழ்ந்து, தனக்கு ஏற்படும் துன்பத்தை நீக்க, அந்த இறைவன் திருநாமத்தைச் சொல்லி, துன்பத்தை நீக்கிக் கொண்டு, இன்பமாக வாழ்கிறது என்பதால் இறைவன் திருநாமத்தை சொல்லுவதால் இவ்வுலகத்தில் இன்பத்தையும் மறுமையில் பேரின்பத்தையும் அடையலாம் என்பதை யானைகளைப்பற்றி ஓர் கோர்வையாக வைத்து பெரியாழ்வார் விளக்கியுள்ளார்.



---

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

அமைப்பு ஆகமங்களில் விதிக்கப்படவில்லை. மேலும் இது வேறெங்கும் இல்லாத மற்றுமோர் சிறப்பாகும். இலட்சுமி நரசிம்மர் வடிவில் நரசிம்மர் மடிமீது திருமகள் இருக்க வேண்டும். ஆனால் இங்கு திருமகள் இறைவனது மடியில் இல்லை. அவனது மார்பில் அணிந்துள்ள மாலையில் திருமகள் உருவம் உள்ளது. இருப்பினும் இவன் இலட்சுமி நரசிம்மர் என்று அழைக்கப் பெறுகிறான். உட்கார்ந்துள்ள நிலை, கைகளின் நிலை ஆகியவற்றில் இங்குள்ள வடிவமும் நரசிங்க விண்ணகரத்தில் உள்ள வடிவமும் ஒன்றுபோல் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. கருவறைக்கு வலது புறத்தில் உக்ர நரசிம்மர் வடிவம் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. இவனது 8 கைகளில், 4 கைகளில் சங்கு, சக்கரம், கத்தி மற்றும் வில் உருவாக்கப்பட்டுள்ளன. ஒரு கை அசுரனது முழங்காலையும், மற்றொரு கை அவனது ஒரு கையையும் பிடித்த நிலையில் உள்ளன. ஏனைய இரு கைகள் அவனது மார்பைப் பிளக்கும் நிலையில் உள்ளன. உக்ர நரசிம்மர் வடிவம் பாண்டியர் மற்றும் அதியமான்களது குடைவரைக் கோயில்களில் காணப்படுவதன்றி, பல்லவர்களது குடைவரைக் கோயில்களில் உருவாக்கப்படவில்லை. இதை அடுத்துள்ள வைகுந்த நாராயணன் திருவுருவுடன் பால நரசிம்மர் வடிவம் காணப்படுகிறது. தலைவனை அடைக்கலம் அடைந்த அமரர்களுக்கு தான் எந்த வடிவில் இரணியனைக் கொல்லுவேன் என்று திருமால் முன் கூட்டியே கூறுவது போன்று இது உள்ளது. மலையின் கிழபுறமாக உள்ள குடை வரைக் கோயிலில் கருவறையை அடுத்து இடது புறத்தில் பால நரசிம்மர் வடிவம் 4 கைகளுடன் புடை சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. பின் இரு கைகளுக்கு மேல் சங்கும் சக்கரமும் தனியாக இருக்க, முன் இடது கை கதய வலம்பித முத்திரையில் உள்ளது. இங்குள்ள இரு குடைவரைக் கோயில்களில் உள்ள பால நரசிம்மரைப் போன்ற வடிவங்கள் வேறு எந்த குடைவரைக் கோயிலிலும் இல்லை.

புதுக்கோட்டை மாவட்டம் மலையடிப்பட்டியில் உள்ள திருமாலுக்குரிய குடைவரைக்கோயிலில் கருவறைக்கு இடது புறம் நரசிம்மர் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ள இவனது பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும், முன் வலது கை முழங்கால்மீதும், முன் இடதுகை தொடைமீதும் உள்ளன. இவன்மீது காணப்படும் வர்ணப்பூச்சுகள் சித்தன்ன

 

வாசல் குடைவரைக் கோயிலில் உள்ளது போன்று தமிழகத்தில் உள்ள வற்றில் மிகவும் தொன்மை வாய்ந்தது என்று கருதப்படுகிறது.

வராகம் போலன்றி நரசிம்மரை மூலவராகக் கொண்ட குடைவரைக் கோயில்கள் பலவாகள மட்டுமன்றி பாண்டியர்கள் மற்றும் அதியமான் களாலும் உருவாக்கப்பட்டுள்ளன எனபதும் குறிப்பிடத்தக்கதாம.

குடைவரைக் கோயில்களைத் தொடர்ந்து கட்டப்பெற்ற கற்றளி களிலும் இந்த வடிவம் இடம் பெற் றுள்ளது காண்போரை வியப்பில் ஆழ்த்தும் கலைக்கருவூலமான காஞ்சி புரம் கைலாயநாதர் கோயிலிலும், பல்லவ வரலாற்றினைக் குறிக்கும் சுதை வேலைப்பாட்டினைக் கொண்ட காஞ்சிபுரம வைகுந்தப் பெருமாள் கோயிலிலும் நரசிம்மர், உக்ர நர சிமமா வடிவங்கள் காணப்பெறு கின்றன.

செங்கல்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த உத்ரமேரூரில் உள்ள அஷ்டாங்க விமானத்தை உடைய சுந்தர வரதப் பெருமாள் கோயிலில் இரண்டாவது தளத்தில் மேற்கு நோக்கி யோக நரசிமமா வடிவம காணப்படு கிறது. பஞ்சவரதத்தலம் என்று புகழ்பெற்ற இந்தக் கோயிலில் உள்ள 9 மூலவர் வடிவங்களில் இது ஒன்று. இவன் இரு கால்களை மடக்கி இருகைகைமீது குத்திட்டு உட்கார்ந்து உள்ளான. இவனது 4 கைகளில பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இரு கைகள் முழங்கால மேல நீட்டிய நிலையில் உள்ளன. இந்த அமைப்பு ஆகமத்தில் கூறிய படி உள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

நரசிமமரை மூலவராகக் கொண்ட கற்றளிகளில வட ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த சோளிங்கர் திருக் கோயில் புகழ்மிக்கது. அரக்கோணத்தை அடுத்துள்ள இந்த ஊரினின்றும் சுமார் 2 கிலோமீட்டர் தொலைவில இரு மலைகள் உள்ளன. பெரிய மலையில் யோக நரசிமமரும், அதற்கு எதிர்புறமுள்ள சிறிய மலையில் யோக அனுமாரும உள்ளனர். நரசிமமரது திருக்கோயிலைக் கொண்ட மலை கடிகாசலம் என்று அழைக்கப்பெறு கிறது. இரணியனை சிங்கவேள் குன் றத்தில் கொன்றபின் நரசிம்மர் வான வீதியில வரும் வழியில் 7 மாமுனிவர் களுக்கு இம்மலையில் ஒரு கடிகை நேரம் காட்சி அளித்த காரணத்தால், இது கடிகாசலம் எனப் பெற்றது. (கடிகை என்றால நாழிகை என்று பொருள்). சுமார் 1300 படிகளைக் கொண்ட பெரிய மலையின உச்சியில் உள்ள திருக்கோயிலில் மூலவராக யோக நரசிம்மா சிலா வடிவமாக உள்ளான். கிழக்கு நோக்கி இரு கால்களை இருகைகைமீது குத்திட்டு அதாவது உத்குடி இருக்கையில் உட் கார்ந்து உள்ளான். அவனது இரு கால்களைச் சுற்றிலும யோக பட்டை அமைக்கப்பட்டுள்ளது. அதில் திருமாலின 10 அவதாரங்கள அமைக்கப் பட்டுள்ளன. இது வேறு எங்கும் காணப்படாத தனிச் சிறப்பாகும். இவனது காலடியில திங்களும ஞாயிறும் இருக்க, இவனது 4 கைகளில் சங்கும் சக்கரமும் அமைச்கப்பட் டிருக்க, முன் இரு கைகளையும் தன முழங்கால்கள்மீது நீட்டிக் கொண டிருக்கிறான். இந்தத் திருவுரு உத்தர மேரூரில் உள்ள வடிவம் போன்றும், ஆகமத்தில விதித்தபடியும் அமைந் துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. நாமக்கல குடைவரைக் கோயிலில் உள்ள மூலவரின் மடியில் திருமகள் இல்லாது இருப்பினும், இலட்சுமி நரசிமமர் என்று அழைக்கப் பெறு வது போன்று இங்குள்ள வடிவமும் திருமகளைத் தன மடியில அன்றி மார்பில் கொண்டிருப்பதால், இலட்சுமி நரசிம்மர் என்ற பெயர் பெற்றுள்ளது. இரணியனைக் கொன்ற பின்னும் நரசிம்மத்தின் சீற்றம் தணியவில்லை. அதனால் அதைக்கண்ட வானவாகள அஞ்சி நடுங்கினார்கள்.

“நோக்கினர் நோக்கினர்முன் நோக்குறுமுகமும் கையும்
ஆக்கையும தாளுமாகி எங்கணும் தானே ஆகி
வாக்கினால மனத்தினால் மற்று அறிவினால் அளிக்கவாரா
மேக்குயர் சீயம்தனனைக் கண்டனர் வெருவுகின்றார்”

(6-3-284)

என்பர் கம்பநாட்டாழ்வார் தமது இராம காதையில் நரசிம்மம் பல முகங்களும், கைகளும், உடலும், கால் களும் உடைத்தாய் எங்கும் தானே நிறைந்து இருந்ததையும் சொல்லாலும், கருத்தாலும், அறிவினாலும் அளக்க இயலா நரசிம்மத்தைக் கண்டு உம்பர்கள் அஞ்சினர்கள் என்பதாம் இத்தகைய அச்சத்தை கூறும் அளிக்கும் வடிவத்தின் திருமுகத்தில் இங்கு அமைதி மட்டுமன்றி அன்பர் கள்பால் தான் கொண்டுள்ள அருளும் திகழ்ந்து விளங்குவதைக் காணலாம்.

“வண்டு வளங்கிளரும் நீர்சோலை வண்பூங்கடிகை
இளங்குமரன தன விண்ணகர்”

(மூன். திரு. 61)

எனப் பேயாழ்வாராலும்,

“மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன் மலையை
தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த
அக்காரக்கனியை அடைந்து உயந்து போனேனே” (8-9-4

என மங்கை மன்னனாலும் மங்களா சாசனம் செய்யப் பெற்றவன். மேலும் மங்கை மன்னன் எட்டாம் பத்து ஒன்பதாந்திருமொழி ஒன்பதாந்திருப் பாசுரத்திலும், சிறிய திருமடலிலும் இந்தத் தலத்தைக் குறிப்பிட்டுள் ளார். நாமக்கல்லில் நரசிம்மர் திரு முன் சுமார் 18 அடி உயரமுள்ள அனுமார் கூப்பிய கையனாய் நின்ற நிலையில் காணப்படுகிறான். இங்கு மூலவர்

திருமுன் அனுமன் யோக வடிவில் எதிரே உள்ள மலைமேல் மேற்கு நோக்கிக் காணப்படுகிறான். இவனது 4 கைகளில், பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் காணப்பட, முன் வலக்கையில் அக்க மாலையும், முன் இடக்கையில் குண்டிகையும் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகு அமைப்பு வேறு இடத்தில் காணப்படாத ஒன்றும். மேலும் உற்சவருக்கு என்று தனியாக ஒரு திருக்கோயில் சோளிங்கரில் உள்ளது. மூலவருக்கு ஒரு திருக்கோயிலும், உற்சவருக்குத் தனியாக இன்னொரு கோயிலும் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தின் தலைநகரமான சிவகங்கையினின்றும் திருப்புத்தூர் செல்லும் வழியில் பெரியாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான் மற்றும் மங்கை மன்னன் ஆகியோரால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற திருக்கோட்டியூர் உள்ளது. திருமாலின் மூன்று திருக்கோலங்களை உடைய மூன்று தளங்களையும் அஷ்டாங்க விமானத்தையும் கொண்டது இந்தத் திருக்கோயில். உலகம் உய்ய இராமானுஜரால் திருமந்திரம் உபதேசிக்கப்பட்ட திருத்தலம் இது. இதேத்திருக்கோயிலின் திருச்சுற்றில் வடபுறம் உள்ள வாயிலுக்கு இரு புறமும் நரசிம்மரின் அச்சத்தை அளிக்கும் இரு வடிவங்கள் உள்ளன. இவை இரண்டும் சுமார் 6 அடி உயரம் உள்ளன. வாயிலுக்கு வலது புறத்தில் நரசிம்மரும் இரணியனும் சண்டையிடுவது உருவாக்கப்பட்டுள்ளது. நரசிம்மருக்கு 8 கைகள் காணப்படுகின்றன இடது புறத்தில் நரசிம்மர் தன் மடியில் இரணியனைக் கொல்லுவது அமைக்கப்பட்டுள்ளது. 10 கைகள் கொண்ட நரசிம்மரின் இரு கைகள் இரணியனின் வயிற்றினுள்ளும், இரு கைகளில் இரணியனது குடலை மாலை போன்று பிடித்தநிலையிலும் உள்ளன. அவனது வலக்கை ஒன்று இரணியனின் காலைப் பிடித்துக் கொண்டிருக்க, இடக்கைகளில் ஒன்று தலையையும், மற்றொன்று கையையும் பிடித்த நிலையில் காணப்படுகின்றன.

யோக நரசிம்மரைத்தான் திருக்கோயில்களில் மூலவராக எழுந்தருளிவித்து வழிபடுவது மரபு. உக்ர நரசிம்மரின் வடிவம் புடை சிற்பமாகவோ அல்லது சிலா வடிவமாகவோதான திருச்சுற்று ஆகியவற்றில் காணப்படும். இதற்கு மாறுக சிங்கிரி கோயில் என்ற தலத்தில் உக்ர நரசிம்மர் மூலவராகக் காணப்படுகிறான். பாண்டிச்சேரியினின்றும் மருகரை வழியாக விழுப்புரம் செல்லும் வழியில் உள்ள அபிடேக புரத்தை அடுத்து இந்தக் கோயில் உள்ளது.

இங்கு மூலவராக உள்ள உக்ர நரசிம்மருக்கு 16 கைகள் காணப்படுகின்றன அவனது வலது கைகள் எட்டினுள் ஒன்று ஓங்கிய நிலையிலும், மூன்றில் சுடராழி, கத்தி மற்றும் அம்பும், ஒரு கை ஒரு அசுரன் மூக்கைப் பிடித்த நிலையிலும், ஒரு கை முட்டியால் ஒரு அசுரனைக் குத்தும் நிலையிலும், ஒரு கை இரணியனது வலது காலைப் பிடித்த நிலையிலும், மீதியுள்ள கை அவனது வயிற்றினுள்ளும் உள்ளன. அவனது இடது கை எட்டினுள் ஐந்தில் இரணியனது குடலாகிய மாலை, சங்கு, கேடயம், வில் மற்றும் கதையும், ஒரு கை ஒரு அவுணன தலையைப் பிடித்த நிலையிலும், மீதியுள்ள கை அவனது வயிற்றினுள்ளும காணப்படுகின்றன. வைகானச ஆகமத்தின்படி, இங்கு உள்ள வடிவிற்கு 16 கைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஆகமத்தில் விதிக்கப்பட்டபடி உருவாக்கப்பட்டுள்ள இங்குள்ள வடிவின் வலது கை ஒன்று அபய முத்திரையில் இல்லை என்பது குறிப்பிடத்தக்க வேறுபாடாகும். நரசிம்மத்தின் மடியில் கிடத்தப்பட்டுள்ள இரணியன் அசுரர்தம் பெருமான் என்பதற்கு ஏற்ப அவனது தலையில் கிரீடம உள்ளது. நரசிம்மருடன் போரிட அவனது வலது கையில் வாளும் இடது கையில் கேடயமும் ஆகமத்தின்படி அமைக கபபட்டுள்ளன. ஆகமத்தில் விதிக்கப்பட்டபடி நின்ற நிலையில் 'இலலாது சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இந்த வடிவின் தொங்கிய கால் அசுரன் ஒருவனை கீழே நசுக்கிய நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது. வலது கை ஒன்றினால் மூக்கைப் பிடிக்கப்பட்ட அசுரனால் மற்றொரு அசுரன் நசுக்கப்படுகினறான். நரசிம்மரின் இடது புறத்தில் அசுரர் குலகுருவான சுக்ராச்சாரியாரும், தலைக்கு மேல் இரு கைகளைக் கூப்பி வணங்கிய நிலையில் இரணியனது மனைவியான லீலாவதியும, வலது புறத்தில் அன்பன பிரகலாதாழ்வாரும அமைக்கப்பட்டுள்ளனர். இங்குஉகர நரசிம்மர் மூலவராக உள்ள காரணத்தால், இந்த வடிவின் முகத்தில் அச்சத்திற்குப் பதில் அமைதி தவழ்கிறது. உக்ர நரசிம்மரை மூலவராகக் கொண்ட திருக்கோயில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. ★

## மதம்

பாமரனைப் பண்புள்ளவனாகவும் பண்புள்ளவனைத் தெய்வமாகவும் உயர்த்தும் கருத்தே 'மதம்' எனப்படும்.

## பயிற்சி

சிந்தனையின் தொன்னூறு சதவிகித ஆற்றல் மனிதனால் வீணாக்கப்படுகிறது. எனவே தொடர்ந்து அவன் பெரிய தவறுகளைச் செய்து கொண்டே இருக்கிறான். சரியான பயிற்சியைப் பெற்ற மனிதனின் மனம் ஒருபோதும் தவறு செய்வதில்லை.

—விவேகானந்தர்.

# பொறுப்பாண்மைக் குழு முடிவுகள்

அண்மையில் திருமலையில் கூடிய தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்ட சில முக்கிய முடிவுகள் பின வருமாறு :

திருப்பதி மலையடிவாரத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் விருந்தினர் மற்றும் உணவு விடுதியினை திருப்பதியைச் சார்ந்த திரு. கே. ரவீந்திரநாத் ரெட்டி அவர்களுக்கு 3 வருட காலத்திற்குக் குத்தகைக்கு விடுவதென குழுக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

இந்தியாவிலுள்ள மாநிலங்களில் பதிவு செயயப்பட்ட கோயில்கள், ஆகும் மதிப்பில் பாதித்தொகையான ரூ. 2,300/- செலுத்திடும்போது, அக்கோயில்களுக்கு ஒலிப்பெருக்கிக் கருவிகளை தி. தி. தே. வழங்கி வருகின்றது. அதுபோது வழங்கப்படும் 6 ஒலி நாடாக்களை தற்போது 10 ஆக உயர்த்த குழு முடிவு செய்துள்ளது

ஃ ஃ ஃ

அண்மையில் வெளிடப்பட்ட ஆந்திர மாநில அரசு உத்திரவினை மனதிற் கொண்டு, தி. தி. தே. குருடர் இல்லத்தில் தங்கி தேவஸ்தான. கல்லூரிகளில் பட்டப்படிப்பு படிக்கும் பார்வையற்ற மாணவர்களுக்கு ரூ. 245/- எனவும், குருடர் இல்லத்தில் இருக்கும் பெரியோர்களுக்கு ரூ. 150/- எனவும் (உதவித் தொகை) 1988–89 கல்வி ஆண்டிலிருந்து உயர்த்த குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

31-3-84 தேதிக்கு முன்பிருந்தே தி. தி. தேவஸ்தானத்தில் நிர்ணயிக்கப்பட்ட ஊதியத்தில் மற்றும் தினச் சம்பளத்தில் பணிபுரிந்தவரும் ஊதியர்களுக்கு 1988–91 ஆண்டிலிருந்து கமபளிச் சால்வைகள் மற்றும் போர்வைகளை வழங்குவதென்று குழு தீர்மானித்துள்ளது. இதற்காக ரூ. 3,77,620 ஒதுககப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

தி. தி. தே. நடத்தும் இசைக்கச்சேரிகளின்போது பங்கேற்கும் பக்க வாத்திய இசைக் கலைஞர்களுக்கு நிகழ்ச்சிகளுக்கு ரூ. 100/- அளிக்கப்படும் முறையை தொடர்ந்து மேற்கொள்வதற்கு குழு ஒப்புதல் அளித்துள்ளது.

ஃ ஃ ஃ

திரு. சிஷ்டா சுப்பாராவ் அவர்கள் எழுதிய பகவத்கீதை ராஜாஜி மற்றும் கே. எம். முன்ஷி போன்றோர் எழுதிய ராமாயணம், பாரதம், பாகவதம் போன்ற நூல்களை இலவசமாக பள்ளி மாணவ மாணவிகளுக்கு வழங்க குழு தீர்மானித்துள்ளது. விரைவில் இத்திட்டம் மேற்கொள்ளப்படும்.

ஃ ஃ ஃ

திருமலை தர்மகிரியில் உள்ள தி.தி. தே. வேத விக்ஞான பீடத்திற்கென ஊழியர் குடியிருப்பு, விருந்தினர் விடுதி, மாணவர் இல்லம், சமையற் கூடம், உணவருந்தும கூடம், மருத்துவ நிலையம் ஆகியன அமைக்க ரூ. 49,93 இலட்சம் ஒதுக்குவதென்று குழு தீர்மானித்துள்ளது.

ஃ ஃ ஃ

திருமலை கல்யாண கட்டாக்களில் (தலை முடி மழிப்பிடம்) பணிபுரியும் சுமார் 500 நாவிதர்களுக்கு, தேவஸ்தான ஊழியர்களுக்கு வழங்கப்படுவது போன்றே கம்பளிச் சால்வைகளை வழங்க ரூ. 1,05,000 குழுவினால் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

சிறந்த பொருளாதார நிபுணர்களைக் கொண்டு திருமலைப்பற்றிய வளர்ச்சியினை-திருமலை வாழ் மக்கள், கடந்த 10 ஆண்டுகளாக திருமலையில் குடியேறிய மக்கள் ஆகியோர்களால் திருமலை பெற்ற பொருளாதார, வர்த்தக, ஜன நெருக்க பிரச்சனைகள் ஆகியவற்றை-ஆய்வு செய்து அறிக்கை ஒன்றினை வெளியிடும் பணிக்கென ரூ. 21800/- ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

இலண்டன் நாட்டிலுள்ள லக்ஷ்மி நாராயணன் அறக்குழுவின் தலைவர் வேண்டுகோளுக்கிணங்க லண்டனில் ஸ்ரீ மகாலக்ஷ்மி கோவில் ஒன்றினைக் கட்ட வட்டி வசூலிக்காத தொகையாக ரூ. 5 இலட்சத்தினை வழங்க குழு முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

நாட்டிலுள்ள பதிவு செய்யப்பட்ட வெளியார் கோயில்களுக்கு உதவிடும் வகையில் விண்ணப்பித்திடும் கோயில்களுக்கு ஒலி பெருக்கிக் கருவிகளை ஆண்டுதோறும் தி.தி.தே. வழங்கி வருகின்றது. இவ்வகையில் இவ்வாண்டு 300 ஒலிபெருக்கிக் கருவிகளை வழங்க குழு ரூ. 13,80,00/- ஒதுக்கியுள்ளது.

∴

## சந்தாதாரர்களுக்கு....

31-7-89—ஆம தேதியுடன் முடிவடையும ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சநதா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

78 96 208 210 211 333 341 342 346 348 349 352 353 362 544 516 720 732 743 744 745 746 751 761 762 1597 1663 1716 1722 1723 1727 1744 1750 1755 1759 1769 1770 1772 1754 1777 1781 1783 1801 1802 1807 1814 1816 2835 1849 1907 2354 2890 3066 3103 3141 3144 3146 3149 3153 3155 3156 3160 3161 3162 3164 3165 3166 3168 3169 3170 3175 3176 3178 3180 3187 3191 3194 3195 3196 3200 3207 3212 4199 4217 4357 4415 4416 4417 4418 4419 4421 முதல் 4436 4438 4439 4441 4442 4443 4444

# திருமலையில் தங்கு வசதிகள்

முன் கூட்டியே பதிவு செய்து கொள்ள, தேவையான பணத்திற்கான மணியார்டர் ரசீது அல்லது டிமாண்ட் டிராப்டு ஒன்றினை "உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504" எனும் முகவரிக்கு ஆங்கில விண்ணப்பத்துடன் அனுப்பவும். 20 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்பியத்தொகை, தங்கும் தேதி, தங்கும் நபர்கள் ஆகிய விவரங்களை அனுப்புதல் வேண்டும்.

மேஜை, நாற்காலி, படுக்கை வசதிகளுடன் கூடிய கீழ்வரும் தங்கு வசதிகள் உள்ளன.

I. ஹில் வ்யூ சொகுசு அறைத் தொகுதிகள், சங்குமிட்டா, சேஷாத்ரி, அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்.

'ஏ' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-
'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-
எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 25/-
எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-
எச். வி. சி. விருந்தினர் விடுதி பெரிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 50/-
எச். வி. சி. விருந்தினர் விடுதி சிறிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 25/-

இந்த இடங்களுக்கு முன்கூட்டியே இடவசதிக்கான முன்பதிவு செய்து கொள்ளலாம்.

II. மங்களாபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை மற்றும் ஆழ்வார் ஏரி குடில்கள் டி. பி. வெளிப்புற குடில்கள்.

'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 20/-
'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-
வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 ரூ. 70/-
எம். பி. சி 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 20/-
எம்.பி.சி. 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-
டி.பி., ஏ.டி.சி., அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 15-
டி.பி., ஏ.டி.சி. அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 10/-

ஏ.டி.சி. கீழ்த்தளம் முதல் வரிசை
'ஏ' பகுதி ரூ. 30/-
'பி' பகுதி ரூ. 30/-

ஆர்ஜித சேவை கிருஹஸ்தர்கள் மட்டுமே இத்தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்து கொள்ளலாம்.

III. எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதிகளில் தனி அறைத் தொகுதி ரூ. 50/-
எஸ்.வி. விருந்தினர் விடுதியில் மூலை அறைத் தொகுதி ரூ. 60/-
எஸ்.வி. விருந்தினர் விடுதியில் பெரிய அறைத்தொகுதி ரூ. 70/-

IV. பிரயாணிகள் மாளிகையில் உட்குடில்கள் ரூ. 70/-
சிறப்பு அமைப்புக் குடில்கள் ரூ. 100/-
எச்.ஆர்.ஜி. குடில்கள் ரூ. 250/-

முன் பதிவு செய்தல் முடியாது. கிடைக்கும் காலி இடங்களைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

V. ஹில் வ்யூ சொகுசு குடிலில் உள்ள மோடிபவன் (நான்கு அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும் ரூ. 250/-
ஸ்ரீநிகேதன் விருந்தினர் விடுதி ஒவ்வொன்றும் ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-
இந்திரா விருந்தினர் விடுதி (ஒவ்வொரு அறைத் தொகுதியும்) ரூ. 250/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-
பால குடீரம்-ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 250/-
அறைத்தொகுதி முழுவதும் ரூ. 1500/-
ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி ஓர் அறைத் தொகுதி ரூ. 250/-
அடித்தளத்திலும் முதல் தளத்திலும் உள்ள பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் ரூ. 750/-
விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-
கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச்சாதன வசதி உள்ளது) ரூ. 500/-

முன்பதிவு வசதி கிடையாது. வேண்டுகோளுக் கிணங்க காலி இடங்களைப் பொறுத்து வழங்கப்படும்.

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி.தே. திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்

VI. திருமணக் கூடங்கள்:

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு எண். 260, 266, 267, 272. ரூ 75/-
டி.பி. குடில்கள் எண். 71 வரிசை III எண்கள் 136 மற்றும் 152 ரூ. 75/-
ருயா குடில்/கோகினேனி குடில் மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-
சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 125/-
பாலாஜி திருமண மண்டபம் ரூ. 500/-
சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன் பதிவுக்கு, 'இணை செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

# திருநின்றவூர்

திரு. டி. ஸ்ரீனிவாசன்
சென்னை.

வைணவர்கள், சைவர்கள் என்ற இரு சமயத்தாராலும் போற்றப்படும் தலம் திருநின்றவூராகும். 108 வைணவத்திருப்பதிகளில் இத்தலம் ஒன்ருகும். பூசலார் என்ற நாயன் மார் அவதரித்து சிவபெருமானுக்கு மனத்தாலேயே கோவில் கட்டி மகிழ்ந்த சிறப்பும் இத்தலத்துக்கு உண்டு.

சென்னை செணட்ரல் ஸ்டேஷனி லிருந்து திருவள்ளூர் செல்லும் ரயில் கள மூலமாக திருநின்றவூர் ரயில் நிலையத்திலிறங்கி சுமார் இரணடு கி. மீட்டர் தூரத்தில் உள்ள கோயிலை அடையலாம். சென்னை சைதா பேட்டையிலிருந்து பூவிருந்தவல்லி வழியாக சாலை மார்க்கம் பஸ்ஸிலோ, காரிலோ செல்லலாம்.

திருநின்றவூர் என்ற பெயர் வந்த காரணத்தை விளக்க கீழ்க்கணட வரலாறு கூறப்படுகிறது. "திரு" என்ருல் மஹாலட்சுமியைக் குறிக் கும். அவள் தன் கணவரான மஹா விஷ்ணுவுடன் பிணக்கு ஏற்படுத்திக் கொண்டு பூலோகத்தில் உள்ள இத் தலத்துக்கு வந்து நின்ருளாம். பிணக்கு ஒன்றும் பிரமாதமில்லை! ஒரு சமயம் பெருமாள் ஸ்ரீ வைகுண் டத்தில் யோக நித்திரையில் படுத் திருநதார். மஹாலட்சுமி அவரை எழுப்பிப் பாாத்தும் அவர் உறஙகிக் கொண்டே இருந்தாராம். அது நிஜ மான உறக்கமாயிருந்ருல் அவரை எழுப்ப முடியும்? அவர் எழுந்திரா தது கண்டு கோபித்துக் கொண்டு பூலோகத்துக்கு வந்துவிட்டாள் அன்னை மஹாலட்சுமி. ஆனுல் இந்த நாடக நிகழ்ச்சியால் இத்தலத்துக்கு மகத்துவம் ஏற்பட்டுவிட்டது. திரு மங்கையாழ்வார் முத்து முததாக இரண்டு மங்களாசாசனப் பாசுரங்கள் பாட வழி வகுத்துவிட்டது எனலாம்.

மஹாலட்சுமியின் தந்தை வருண பகவான் (சமுத்திரராஜன்) தன் மகளை மற்ற உலகங்களில்தேடிவிட்டுக் கடைசியாக பூலோகம் வந்து இத் தலத்தில் கண்டுபிடித்தார். தன் மகளைப் பார்த்த உடன் "என்னைப் பெற்ற தாயே" என்றுச் செல்லமாக அழைத்தாராம். அந்தப் பெயர் நிலைத்து இங்குள்ள தாயாருக்கு "என்னைப் பெற்ற தாயார்" என றழைக்கிருர்கள். இத்தலத்தில் உள்ள குளத்துககு "வருண புஷ் கரிணி" என்ற பெயர் வந்தது. இதில் நீராடுபவர்களுக்கு ஸேது ஸ்னன பலன் உண்டு என்று கூறுகிருர் கள்.

மஹாலட்சுமியைத் தேடி கருடா ரூடராகப் பெருமாள் இத்தலத்துக்கு வநது சேர்நதார். வருண பகவா னுக்கு முதலில் காட்சியளிக்கிருர். அவர் வேணடுகோளின்படி இத்தலத் திலேயே கோயில் கொண்டு பக்தர் களுக்கெல்லாம் காட்சியளிக்கிருர். திருநின்றவூர்ப் பெருமாளுககு "பக்த வத்ஸலா" எனற பெயர். திருமங் கையாழ்வாா மங்களாசாசனப்பாடல் கள் இரண்டில் ஒன்று கீழே தரப்பட் டுள்ளது.

"ஏறறினை, இமயததுள் எம ஈசனை
இமமை யை, மறுமைக்கு மருந்
தினை
ஆற்றலை அண்டத்து அபபுறத்து
உய்த்திடும்
ஐயனை கையில ஆழி ஒனறு
ஏந்திய
கூற்றினை குரு மாமணிக் குன்றினை
நின்ற வூர் நின்ற நித்திலத்
தொத்தினை
காறறினைப புனலைச் சென்று நாடிக்
கண்ணை மங்கையுள கண்டு
கொண்டேனே".

"கண்ணமங்கையுள் கண்டுகொண் டேனே" என்று பாடியுள்ளதின் காரணம் பின்வருமாறு கூறுகிருர்கள். திருமங்கையாழ்வார் க்ஷேத்திராடன மாக திருநின்றவூர் பக்த வத்ஸலப் பெருமாள் சன்னிதானம் அடைந்த போது அவர் ஆழ்வாரைக் கவனிக்கத் தவறிவிட்டாராம். ஆழ்வார் சிறிது நேரம் பொறுத்துப் பார்த்துவிட்டுப் பாசுரம் பாடாமலே போய்விட்டா ராம்.

அவர் போன பிறகுதான் பெரு மாளும் தாயாரும் ஆழ்வார் காத் திருந்துபோய்விட்ட விஷயம் தெரிந்து கொண்டார்களாம். உடனே ஆழ் வாரைத் தேடிக்கொண்டு பெருமாள் மாமல்லபுரத்தையடைந்தார். பெரு



பெருமாள் கோயில் கோபுரம்.



வருண புஷ்கரிணி.

மாலைக் கண்டவுடன் ஆழ்வார் மகிழ்ந்து முதல் பாசுரத்தைப் பாடினார். அதைப் பெற்றுக் கொண்டு தாயாரிடம் கொடுத்தபோது "ஒரே ஒரு பாசுரம்தானா" என்று அலுத்துக் கொண்டாளாம். அதற்காக மறுபடியும் புறப்பட்டு ஆழ்வாரைத் திருக்கண்ண மங்கை என்ற தலத்தில் கண்டு பிடித்தார். அப்போதுதான் ஆழ்வார் "ஏற்றினை இமயத்துள் எம் ஈசனை" என்று தொடங்கும் பாசுரத்தை வழங்கினார். அதனைக் கொணர்ந்து தாயாரிடம் கொடுத்து மகிழ்வித்தாராம்.

பெருமாள் கோவில் அமைப்பில் முதலில் நம் கண்ணில் படுவது ஐந்து நிலைகள் கொண்ட ராஜகோபுரம். கோவிலுக்குள் நுழைநததும் கொடிமரத்தைத் தரிசித்துவிட்டுப் பின்னர் மகாமண்டபத்தின் வழியாகப் பெருமாள் கர்ப்பக்கிருஹத்தை அடையலாம். பக்தவத்ஸலப் பெருமாள் (மூலவர்) உபய நாச்சியார்களுடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். அந்தப் பேரழகில் கண் வைத்து நம்மை மறந்து நிற்கிறோம். அந்த தரிசனத்தால் ஏற்படும் பேரானந்தம் நாம் இத்தலத்துக்கு விஜயம் செய்ய எடுத்த சிரமத்தை எல்லாம் போக்கடித்து விடுகிறது. கருவறையிலிருந்து வெளி வந்து பிராகாரத்தில் தனிச் சன்னிதியில் வீற்றிருக்கும் தாயாரைச் சேவிக்கலாம். மற்றும் சக்கரத்தாழ்வார், ஆதிசேஷன், ஆண்டாள், விஷ்வக்ஸேனர் ஆகியோருககும் தனித்தனி சன்னிதிகள் உள்ளன.

பெருமாள் கோவிலுக்கு எதிர்ப்புறம் சற்றுத்தள்ளி சிவன் கோவில் அமைந்துள்ளது. சுவாமிககு "ஹ்ருதயாலீச்வரர்" என்று பெயர். தனிச் சன்னிதியில் அம்மன் மரகதாம்பாளைத் தரிசிக்கலாம். இந்தக் கோவில் கட்டப்படுமுன்னரே பூசலார் என்ற சிவனடியார் இறைவனுககுத் தன ஹ்ருதயத்திலே ஒரு கோவில் கட்டிவிட்டாராம்.

அக்காலத்தில் காஞ்சியில் அரசு புரிநத பல்லவ மன்னன் ராஜ சிம்மன் கைலாசநாதருக்கு ஏராளமான பொருட் செலவில் ஒரு கோவில் கட்டியிருக்கிறான். அதைக் கட்டி முடிக்க இரண்டு வருட காலம் பிடித்தது. அதேபோன்று அணு அணுவாகச் சிந்தனை செய்து ஆழ்ந்த பக்தியோடு மனத்தினுள்ளே பூசலார் கோயில் கட்டி வந்தார். பல்லவ மன்னன் கட்டிய கற் கோவிலுக்குக் குட முழுக்கு விழாவுக்கு நாள் குறிக்கப்பட்டது. அதே நாளில் பூசலாரும் தன் மனக்கோயிலுக்குக் குட முழுக்கு விழா நடத்த இறைவனிடம் கேட்டுக் கொண்டார். சிவபெருமான் அடியார் மனக்கோயிலுக்கு நேரில் வரப் போவதால் மன்னன் கனவில் தோன்றி அவன் கோவில் விழாவை வேறு ஒரு நாள் வைத்துக் கொள்ளச் சொன்னார். மன்னனும் தன் கோவில் விழாவைத் தள்ளிவைத்துக் கொண்டு அடியாரின் இறைப் பக்தியைப் போற்றினான் என்ற வரலாறு வழங்கப்படுகிறது.

திருநின்றவூரில் இராமபிரானுக்கும் ஒரு தனிக் கோவில் அமைக்கப் பட்டிருக்கிறது. மதுராந்தகத்தில் 'ஏரிகாத்த ராமன்' என்ற பெயரில் உள்ளதுபோல் இங்கேயும் வருண புஷ்கரிணிக் கரையில் இராமர் கோயில் உள்ளது. இதில் மூலவர் ராமபிரான ஆஜானுபாகுவான (சுமார் ஆறு அடி உயரத்தில்) சீதா, லக்ஷ்மண ஸமேதராகக் காட்சியளிக்கிறார். இந்தக் கோயிலில் பிரார்த்தனைகளும், கல்யாணங்களும் நடைபெறுகின்றன

திருநின்றவூர் கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளில் பல்லவ அரசன் நந்திவர்மன், சோழ மன்னன் மூன்றாவது இராஜராஜன் காலத்தியவை இடம் பெற்றுள்ளன. தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை சமீபத்தில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த இரணடு கல் வெட்டுகளை கண்டுபிடித்துள்ளனர். இவ்வூர் பள்ளி ஆசிரியர் ஒருவர் இநத கல் வெட்டுகளைப் பார்த்துவிட்டு அரசுத் துறைக்குத் தகவல் கொடுத்தார். பத்தாம் நூற்றாண்டில நீதிபதிகளைத் தேர்நதெடுக்கும் முறை, வயது, கல்விததகுதி ஆகியவை விவரிக்கப் பட்டுள்ளது. நீதித்துறை வேறு; நிர்வாகத்துறை வேறு என்றும் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது.



EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED

## 581st ANNAMACHARYA JAYANTI



ON MAY 20 & 21, 1989 IN MADRAS



ON MAY 30, 1989 AT TIRUPATI

